# ஸ்ரீ ஆண்டாள் அருளிய
# திருப்பாவை





விளக்க உரை:

பேராசிரியர்

அ. சீநிவாசராகவன்

மெர்க்குரி புத்தகக் கம்பெனி

கோயமுத்தூர்-1.

# ஸ்ரீ ஆண்டாள் அருளிய
# திருப்பாவை



விளக்கவுரையாளர் :

பேராசிரியர் **அ. ஸ்ரீநிவாசராகவன்**

தூத்துக்குடி.




கோயமுத்தூர் - 1.

# முன்னுரை

மார்கழி மாசம் வருகிறது. பனியும், குளிரும், நோயும் மலிந்த மாசம். வாழ்க்கை என்ற மார்கழியிலும், அறியாமையாலான பனி கண்ணை மறைக்கிறது; சாவு என்ற வாடைக்காற்றில், உள்ளம் பயக்குளிரில் நடுங்குகிறது; உயிரோ, ஆசை, ஏமாற்றம், தீமை, பொருமை முதலிய எத்தனையோ நோய்களில் அழுந்தி வேதனை உறுகிறது. 'மாசங்களுக்குள் மார்கழி மாதத்தில் நான் இருக்கிறேன்' என்று பகவான் ஏன் கீதையில் கூறினன்? ஆற்றமுடியாது, அல்லற்படும்போதுதான் உயிர் தன்னை நோக்கி, தலைவனை நோக்கித் திரும்பும் என்ற கருத்தாலோ? அப்படித் திரும்பி, இறைவனைக் கண்ட இரண்டு உள்ளங்கள் முறையே 'திருப்பாவை'யிலும், 'திருவெம்பாவை'யிலும் பேசுகின்றன. பேச்சைக் கேட்டால், புரிந்துகொண்டால், நம்முடைய மார்கழி, தையாக மாறும். ஆனல் கேட்பதற்கு நேரமில்லை, புரிந்துகொள்ளப் பொறுமை இல்லை. அப்படிப் பட்டவர்களுக்கு - அதாவது, என் போன்றவர்களுக்கு - துணையாக இருக்கட்டும் என்று கருதி, இவ்வுரை எழுதப் பெற்றது. 'திருப்பாவை'க்கு அற்புதமான பழைய உரைகள் பல உள்ளன; 'திருவெம்பாவை'க்கோ இக்காலத்தில் எத்தனையோ பெரும்புலவர்கள், அருமையான விளக்க உரைகள் சொல்லி வருகிறார்கள். அவற்றிலே உள்ள விரிவையும், நுட்பத்தையும், புலமைத் திறனையும், தத்துவப் பாங்கையும் இங்கே இந்த உரையில் காணமுடியாது. பாவைப்

பாடல்களிலே உள்ள ஆழ்ந்த உணர்ச்சியை, போகிற போக்கிலே சிறிது பெற விரும்பும் என் போன்ருருக்கு மட்டும் இவ்வுரை பயன்படலாம் என்று எண்ணுகிறேன். இவ்வுரையைச் சில ஆண்டுகளுக்குமுன் வானெலி நிலையத்தார் ஒலிபரப்பினர்கள். அவர்கள் அனுமதியுடன் திருப்பாவை வெளியாகிறது.

மறுபடியும் சொல்லிக் கொள்ளுகிறேன்: இவ்வுரை ஒரு சிறுபடி, ஆண்டாள், மாணிக்கவாசகர் இவர்களுடைய அலகிலாப் பக்தி உணர்ச்சியை நோக்கி மனத்தைத் திருப்பும் முயற்சியில் முதற்படி. மற்றைய படிகளிலும் நாம் நடந்து உய்ய, திருமாலும், சிவபெருமானும் அருள்பாலிக்க வேண்டும். இதுவே என்னுடைய பிரார்த்தனை.

**அ. சீநிவாசராகவன்.**

ஸ்ரீ

# திருப்பாவை விளக்கம்

—: o :—

## மார்கழித் திங்கள்

மார்கழி மாதம். விடியற் காலம். ஸ்ரீவில்லிப்புத்தூர் தெருவிலே, பாவை நோன்பு நோற்கச் செல்லும் கன்னிப் பெண்களின் சிரிப்பும் பேச்சும். மழை பெய்ய வேண்டும், சிறந்த கணவர் தமக்கு வாய்க்க வேண்டும் என்ற நோக்கத்தோடு இப்பெண்கள் நோன்பு நோற்கிருர்கள். மழையா, இறைவனுடைய கருணை மழையல்லவா இந்த உயிருக்குத் தேவை? இன்றிருந்து, நாளை மறையும் யாரோ ஒருவனைக் கணவனுகப் பெறுவதில் என்ன பயன்? என்றுமுள்ள இறைவனை யல்லவா, இந்த உயிர் தன் நாயகனுகப் பெற்று உய்யவேண்டும்?

இப்படியாக எண்ணுகிருள் ஆண்டாள் என்ற பெண்ணொருத்தி. இறைவனை நாயகனுக அடைய முடியுமா? அலகிலாத அவன் பெருமை எங்கே? மனித உயிரின் சிறுமை எங்கே? என்ருலும் அவனுடைய கருணையும் அலகில்லாததுதானே; அன்று கண்ணனுக வந்து, ஆய்ப்பாடியில் இடையரோடு இடையராய் மாடு மேய்த்தது அந்தப் பேரருள்தானே!

கோபியரில் ஒருத்தியாக அன்று பிறக்காமற்போனேமே என்று வருந்தும் ஆண்டாளின் உள்ளத்தில் மாயம் ஒன்று நிகழ்கிறது. இப்போது வில்லிப்புத்தூர் வீதி, கண்ணன்

விளையாடிய ஆயர்பாடியாகக் காட்சி அளிக்கிறது. பாவை நோன்பு நோற்கும் சிறுமியர் நந்தகோகுலத்துப் பெண்களாக மாறி விடுகிறுர்கள். ஆண்டாளோ அவர்களில் ஒருத்தி ஆகி விடுகிறுள்; பாடுகிறுள்.

"இன்று மார்கழி மாதம். பௌர்ணமி. நல்ல நாள் இறைவனை நோக்கித் திரும்புகின்ற நாள் அல்லவா? நீராடப் போவோம்; பகவானுடைய கருணை வெள்ளத்தில் முழுகப் போவோம்; வாருங்கள். பக்தி என்ற இழையை (சிறந்த ஆபரணத்தை) அணிந்து செல்கிறீர்கள். கண்ணன் பிறந்து வளர்வதால் இந்த ஆய்ப்பாடி சீர்மல்கும் ஆய்ப்பாடி ஆகியது. ஆனுல், இதை எண்ணி இறுமாந்துவிட வேண்டாம். அவன் பெருமைக்கெல்லாம் பெருமையானுன்; நாமோ சின்னஞ் சிறு உயிர்கள். இதை மறவாமல் அவன் புகழைப் பாடுவதே நாம் செய்யவேண்டிய நோன்பு. அவனுடைய ஆற்றல், கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரனுக வடி வெடுத்தது. அவனுடைய திருமேனியின் சாயல் படிந்து படிந்து, யசோதையின் கண் அழகு பெற்றது. அவள்,

"ஏர் ஆர்ந்த கண்ணி யசோதை"

ஆனுள். நாமும் அப்படி ஆகவேண்டாமா? ஆனுல், அவன் கார்போன்ற மேனியன்; அவனை எளிதிலே கண்டுவிட முடியாது. என்ருலும் அவன் முகமோ கதிர் மதியம். ஆகவே, அவன் கருணையால் அவனை அறிகின்ற ஞான ஒளி நமக்கும், சிறுமியரான நமக்கும், கிட்டும்.

அவனோடு என்றென்றும் வாழும் பறையை—ஒப்பற்ற அந்த நோன்புப்பரிசை - அவன் நமக்குத் தருவான். எப்போதா? அவன் புகழை இடைவிடாமல் பாடிப் பரவும் நோன்பை நோற்ருல். இதைச் செய்வோம்; வாருங்கள்" என்று நந்தகோகுலத்துப் பெண்களையும், தன் உள்ளத்தையும் ஒருங்கே அழைக்கின்ருள் ஆண்டாள்.

மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
நீராடப் போதுவீர்! போதுமினோ நேரிழையீர்!
சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்!
கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோ பன்குமரன்
ஏர் ஆர்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான்
நாரா யணனே நமக்கே பறைதருவான்
பாரோர் புகழப் படிந்தேலோர் எம்பாவாய். (1)

---

## வையத்து வாழ்வீர்காள்

எல்லையில்லாப் பேரருள் நாம் எட்டிப் பிடிக்கும் அளவுக்குத் தன்னைத் தாழ்த்திக்கொண்டு இங்கே கண்ணனாக வந்தது. கோபியரின் பாக்யமே பாக்யம். பரமபதத்திலும் பெறமுடியாத இறைவன் கருணையை இங்கே இவர்கள் பெற்றார்கள். இதுவல்லவா பெருவாழ்வு! ஆகவே, இவர்களே வையத்து வாழ்பவர்கள்.

இவர்களைப் பார்த்துச் சொல்கிறாள் ஆண்டாள்: "நம்மை அணைப்பதற்கு இங்கே இறங்கிவந்த கண்ணன் என்ற அருளை, என்றும் இடையறாது அணைந்திருக்கும் உரிமையைப் பெறுவதற்குத்தானே இந்தப் பக்தி நோன்பு? இந்த நோன்பின் முறையைத் தெரிந்துகொள்ள வேண்டாமா? பரமபதத்தில் பரம்பொருளாக நின்ற அவன், பாற்கடலில் வந்து பையத் துயின்றான். உலகைப் படைத்த, இந்த அருள் வடிவத்தின் மலரடியைப் பாடுவோம். இதுவே நோன்பின் முதற்படி. பிறகு நெய், பால் முதலியவற்றை உண்ண மாட்டோம். அதாவது, இந்த உலகத்து இன்பங்களை ஒதுக்குவோம்.

விடியற்காலத்தில், நம்முடைய பொழுது தொடங்கும் பொழுதே, நம்மை அவன் உகக்கும்படி நீராடித் தூயவர்கள்

ஆவோம்; மையிட்டுக் கொள்ளமாட்டோம்; மலர் சூட மாட்டோம். மையினுல் அழகும், மலரினுல் மணமும் வந்து விடுமா ? அவன் வந்து அணைக்கும் வரையில் நாம் என்ன செய்தாலும் அழகு கிட்டுமா ? அவனை அறிந்த பாகவதர்கள் எதைச் செய்யவில்லையோ அதைச் செய்யாமல் இருப்போம்; எவ்வுயிர்க்கும் தீங்கு நினைக்கமாட்டோம்; பொய்யையும் புறங்கூறுதலையும் தவிர்ப்போம்; மெய்ப்பொருளை நாடி வருபவரோடு தொடர்புகொண்டு, அவரவர் நிலைக்குத் தகுந்தபடி, எங்கள் அநுபவத்தை இயன்ற அளவுக்கு அவர்களோடு பகிர்ந்து கொள்ளுவோம்.

இப்படிச் செய்வதே ஐயம் இடுவது, பிச்சை அளிப்பது. ஆனுல், இதையெல்லாம் செய்வது அவனைப் பெற்று உய்வதற்காகவே என்பதை மறக்கமாட்டோம்; அவனை மறக்கவே மாட்டோம்; நினைந்து நினைந்து மகிழ்வோம். "இதுவே எங்கள் நோன்பு." இவ்வாறு பாடுகிருள் ஆண்டாள்.

வையத்து வாழ்வீர்காள்! நாமும்நம் பாவைக்குச்
செய்யும் கிரிசைகள் கேளீரோ; பாற்கடலுள்
பையத் துயின்ற பரமன் அடிபாடி
நெய்உண்ணேம் பால்உண்ணேம் நாட்காலே நீராடி
மையிட் டெழுதோம் மலரிட்டு நாம்முடியோம்
செய்யா தனசெய்யோம் தீக்குறளை சென்ருேதோம்
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி
உய்யுமா றெண்ணி உகந்தேலோர் எம்பாவாய். (2)

---

## ஓங்கி உலகளந்த

"உயிர்களைக் காப்பதற்காக அவதாரம் செய்தான் பகவான். நம் நிலைக்கு இறங்கி வாமனனுகக் காட்சி அளித்தான். ஆனுல், அவன் ஆற்றலும் கருணையும் உலகம் எங்கும், அதற்கப்பாலும் பறந்துள்ளன என்பதை நமக்குக்

காட்டுவான்போலே, ஓங்கி வளர்ந்து திரிவிக்கிரமனாக நின்றான். நம்மிடம் ஒன்றையும் எதிர்பாராமல் இப்படி உதவியவன் அல்லவா உத்தமன்?

ஓங்கி உலகளந்த இவ்வுத்தமன் பேரைப் பாடிக்கொண்டு, பக்தியில் முழுகும் நோன்பை நோற்றால் நமக்குக் குறைவேது? நாடெல்லாம் மாதம் மூன்று முறை தீங்கில்லாத மழை பெய்யும்; வயலிலே வளம் பெருகும்; செங்நெல் ஓங்கி வளரும். அவற்றின் ஊடே கயல் மீன்கள், கண்ணனைக் காணத் துடிக்கும் நம்முடைய உள்ளங்களைப் போலத் துள்ளும். கண்ணனைப் பெற்று மற்றெல்லாவற்றையும் மறந்து ஒளி பெற்று நிற்கும் பாக்யவதியைப் போல, குவளை மலரின் உள்ளே, பொறி வண்டு வினையொழித்து மெய்மறந்து கண் வளரும்.

கண்ணன் அருள் வள்ளல்; இங்கு அவன் கரம் பட்டு வளரும் பசுக்களும் வள்ளல் - தன்மையோடு அளவில்லாத பாலைச் சொரியும். நிலையில்லாதது என்று பேசப்படும் இவ்வுலகச் செல்வமும் நிலைபெற்று, நீங்காத செல்வம் ஆகிவிடும்.

நமக்கென்ன குறை? உடல் அபிமானம் என்ற தீமையை அழிக்கின்ற அருள் மழை கிட்டும்; உள்ளம் ஓங்கி வளரும்; பேரின்பத்தில் துள்ளும். நம் உள்ளத்தின் உள்ளே இறைவன் வந்து குவளையில் வண்டைப்போலே கண் வளர்வான். ஞான அமுதத்தை அளவின்றி நமக்கு வழங்கும் வள்ளல்களான ஞானியர் உதவியால் இந்தப் பெருமையை நாமும் அடைவோம்; உய்வோம்" என்று பாடுகிறாள் ஆண்டாள்.

ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி
நாங்கள்நம் பாவைக்குச் சாற்றிநீர் ஆடினால்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும் மாரிபெய்து
ஓங்கு பெருஞ்செந்நெல் ஊடு கயலுகள

பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்ப
தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி
வாங்கக் குடம்நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைந்தேலோர் எம்பாவாய். (3)

---

## ஆழி மழைக் கண்ணா

பாவை நோன்பு நோற்றால் மழை வரும் என்பது பழங் காலத்து நம்பிக்கை. நந்தகோகுலத்து இடைப் பெண்ணாக, பக்திநோன்பு நோற்கும் ஆண்டாள், தன் நோன்பின் பயனாக, மழை பெய்ய வேண்டும் என்று பாடுகிறாள். பக்தி முதிர்ச்சி யால், பார்க்குமிடம் எங்கும் பகவானையே காணும் அவளுக்கு, மழையும் அவனாகவே தோன்றுகிறது. "மழைத் தெய்வமே, உன்னுடைய கொடையில் குறைவே இருக்கப் படாது. எங்கள் கண்ணனைப்போல், தன்னையே தமர்க்கு நல்கும் பண்பு உனக்கும் உண்டு. உன்னையும் கண்ணா, ஆழி மழைக் கண்ணா என்றே அழைப்பேன். நல்லார் பொல்லார் எல்லோரையும் அவன் கருணை அணைக்க வில்லையா! அதுபோல, எங்கும் யாவர்க்கும் ஒரு படித்தாக நீ பெய்யவேண்டும்.

எங்கள் கண்ணன் பாற்கடலிலிருந்து எங்களைக் காக்க வந்துள்ளான். அதுபோலவே நீயும் கடலுக்குள்ளிருந்து, உயிருக்கு உறுதியான நீரை முகந்து கொண்டு வா. ஆம்; அப்படி வரும்போது, உலகங்களையெல்லாம் படைத்துக் காக்கும் ஊழி முதல்வனாகிய இறைவனைப் போலவே, உன் உருவமும் கறுத்திருக்கும். வலிமை பொருந்திய அழகிய தோள்களை உடையவன் எம்பெருமான். அவன் கரத்தில் மின்னுகின்றது ஆழி. அவனைப் போலவே, காக்கும் வலிமை யோடு, சக்கராயுதம் போன்ற மின்னலை ஏந்தி வா. 'இறைவன் வருகிறான், வருகிறான்' என்று அவனுடைய வலம்புரிச் சங்கு

முழங்கவில்லையா? அப்படியே இடியை முழக்கிக்கொண்டு மழையே நீயும் வா. அவன் கையில் உள்ள சார்ங்கம் என்ற வில் அம்பைப் பொழியுமே ஓயாமல் ஒழியாமல், தீமையை ஒழித்து, நன்மையை நிலைநாட்ட. அப்படியே உலகனைத்தும் வாழும்படியாக நீயும் பெய்; மழையே நீயும் பெய்'' என்று பாடுகின்ற ஆண்டாள் மழையையா பாடுகிறாள்? இல்லை. மழையிலே இறைவனைக் கண்டு, அவனையே பாடி விடுகிறாள்.

ஆழி மழைக்கண்ணா! ஒன்றுநீ கைகரவேல்
ஆழியுள் புக்கு முகந்துகொ டார்த்தேறி
ஊழி முதல்வன் உருவம்போல் மெய்கறுத்து
பாழிஅந் தோளுடைப் பற்பநா பன்கையில்
ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல்
வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்
மார்கழிநீ ராட மகிழ்ந்தேலோர் எம்பாவாய். (4)

---

## மாயனை மன்னு வடமதுரை

"இந்தப் பிறவியில் பக்தி செலுத்தினால் போதுமா? எத்தனையோ பிறவிகளில் செய்த வினைப்பயன் விலகி விடுமா?'' என்ற கவலை வருகிறது. "கண்ணன் இங்கே வந்து நம்மிடையே பிறந்திருக்கிறானே, அதை எண்ணிப் பார்த்தால் போதுமே, பிறகு கவலை ஏது?'' என்கிறாள் ஆண்டாள். அவனே மாயன்; அவனோடு பரமபதத்தில் வாழும் நித்ய ஸூரிகளும் முழுவதும் உணர முடியாதபடிக்குக் கடந்து நிற்கின்ற பரம்பொருள்; அவனால் ஆகாதது ஒன்றுமில்லை. அந்த மாயனே இங்கே அவதரித்திருக்கிறான். பிறந்த வட மதுரையை, அவனோடு இடையறாத தொடர்பு கொண்ட மன்னு வடமதுரை ஆக்கினான். மைந்தனாக - குறையா வலிமை உடையவனாக - இங்கேயும் நிற்கிறான்.

அவன் திருவடி தோய்ந்ததால் இந்த யமுனை பரிசுத்தமடைந்தது அவன் கருணையால். அது போலவே, யமுனை நதி பெருவெள்ளம் படைத்து, தூய பெருநீர் யமுனை ஆயிற்று. இந்நதியிலே அவனோடு ஆடி, வினைகளை எல்லாம் கழுவும் வழியை, துறையை, அவனே நமக்குக் காட்ட யமுனைத் துறைவனாகக் காட்சி அளிக்கிறான். தலைவன் என்று கருதி எங்கேயாவது நாம் விலகி நின்று விடுவோமோ என்று எண்ணி நம்முடைய குலத்திலேயே வந்து தோன்றி, அவனுடைய அருளை, உலக இருட்டை விரட்டும் அணி விளக்காக ஏற்றினான்; யசோதை வயிற்றில் பால் வார்த்தான். அவளுடைய அன்புக்குப் பணிந்து, அவள் கடை கயிற்றால் கட்டியபோது ஏற்றுக் கொண்டான். வயிற்றிலே கறுப்புத் தழும்போடு தாமோதரனாக நம்முன்னே வருகிறான். 'உங்கள் அன்புக் கயிற்றினாலும் என்னைக் கட்டலாம்; நான் தாமோதரன்' என்று சொல்வதுபோல வருகிறான். இவனை வாயினால் பாடி, மனத்தினால் சிந்தித்தால், முன் பிறவிகளில் நாம் செய்த பிழைகளும் இனி நம்முடைய அறியாமையால் வர இருக்கும் பிழைகளும் தீயில் இட்ட துரும்புபோல் எரிந்து விடும். ஆகவே, அவன் நாமங்களைச் சொல்வோம்" என்று அழைக்கிறாள் ஆண்டாள்.

மாயனை மன்னு வடமதுரை மைந்தனை
தூய பெருநீர் யமுனைத் துறைவனை
ஆயர் குலத்தினில் தோன்றும் அணிவிளக்கை
தாயைக் குடல் விளக்கஞ் செய்ததா மோதரனை
தூயோமாய் வந்துநாம் தூமலர்தூ வித்தொழுது
வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க
போய பிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் செப்பேலோர் எம்பாவாய். (5)

---

# புள்ளும் சிலம்பினகாண்

நோன்பு நோற்கச் செல்லும் நந்த கோகுலத்துப் பெண்கள் போகும்போது தங்கள் தோழிமார் வீட்டு வாசலில் நின்று, தூங்கிக்கிடக்கும் அவர்களை எழுப்புகிறார்கள் : "விடியற்காலம் வந்துவிட்டது; இறைவனை அடையும் நேரம்; கிருஷ்ணானுபவத் தருணம் வந்துவிட்டது. இதோ பறவைகள் சிலம்புகின்றன. பறவைக்கரசனான கருடனுக்குத் தலைவன் நம்முடைய நாயகன், அவன் கோயிலில் இருந்து சங்கின் பரிசுத்தமான குரல் நம்மை அழைக்கிறது உன் காதில் விழவில்லையா ? என்னடி, சிறு பிள்ளையாய் இருக்கிறாய்? இதோ கேள் "ஹரி" என்ற மெல்லிய ஒலி வருகிறது.

முனிவர்களும், யோகியரும் அதைப் பாடுகிறார்கள். 'நான், எனது' என்ற தம்முடைய அறியாமையை அழிக்க அவர்கள் எண்ணுகிறார்கள். உள்ளத்திலே முளைக்கும் காம குரோதங்களான கள்ளத்தைக் களைந்தெறிய அவர்கள் விரும்புகிறார்கள். பிறவிப் பெரும்பிணி தீருமா என்று கவலைப் படுகிறார்கள். தீர்க்க வல்லவன் ஒருவனே ! அப்பிறவிக்குக் காரணமாய் உலகுக்கெல்லாம் வித்தாய், பாற்கடல் வெள்ளத்தில் பாம்பணையில் பள்ளிகொண்டு யோக நித்திரை புரியும் அவனே, பிறவியைக் களைய வல்லவன். அகங்கார மமகாரம் என்ற பூதனைப் பேயின் உயிரை அவனாலேயே பருக முடியும். காமகுரோதமென்ற சகடாசுரனைக் கட்டுக்குலையும்படி முறிப்பதும் அவனுடைய அருட்பாதமே. ஆகவே, அவனை உள்ளத்திலே கொண்டார்கள் முனிவர்களும், யோகியரும்.

உள்ளத்தில் துயிலும் அந்தப் பொருள், தம் அசைவால் வருந்துமோ என்ற பரிவோடு, மெள்ள எழுந்து "ஹரி" என்று தம் சிந்தை நிறைந்த செல்வத்தைப் பாடுகிறார்கள். அதுதானே நாம் தேடும் செல்வமும்! ஆகவே அவர்கள் துதி

புகுந்ததும் நம்முடைய உள்ளம் குளிர்ந்தது. "இதுவே தருணம்; வா, பக்தி செய்ய வா" என்று நந்தகோகுலப் பெண்களை அழைப்பது போல நம்மை அழைக்கிருள் ஆண்டாள்.

புள்ளும் சிலம்பினகாண் புள் அரையன் கோயிலில்
வெள்ளை விளிசங்கின் பேர்அரவம் கேட்டிலையோ?
பிள்ளாய்! எழுந்திராய் பேய்முலை நஞ்சுண்டு
கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி
வெள்ளத் தரவில் துயிலமர்ந்த வித்தினை
உள்ளத்துக் கொண்டு முனிவர்களும் யோகிகளும்
மெள்ள எழுந் தரியென்ற பேர்அரவம்
உள்ளம் புகுந்து குளிர்ந்தேலோர் எம்பாவாய். (6)

---

## கீசு கீசென்றெங்கும்

நோன்பு நோற்க வருவதாகச் சொல்லிவிட்டு தூக்கத்தில் அழுந்திக் கிடக்கிருள் ஒருத்தி. விடியற்கால வேளையில் அவள் வீட்டு வாசலில் நின்றுகொண்டு, அவளை 'எழுந்து வா' என்று அழைக்கிருர்கள் நோன்பு நோற்கும் ஆயர்குலப் பெண்கள். "ஆனைச்சாத்தன் பறவைகள் கூவுகின்றன. அந்த ஒலி உன் காதில் விழவில்லையா? அடி, பேய்ப் பெண்ணே, மதி கெட்டவளே, பறவைகளின் பேச்சு என்ன என்று கேட்டாயா? பகல் வந்ததும், பிரியப்போகும் ஆண் பறவையும் பெண் பறவையும், அந்தப் பிரிவைத் தாங்க நினைத்தவைபோல் இப்போது கலந்து, கலவி இன்பத்தையும் பிரியும் துன்பத்தையும் ஒன்ருகப் பேசுகின்றன. ஆகவே, அவற்றின் பேச்சுத் தெளிவற்று, குழம்பி, அரவமாய்-வெறும் சத்தமாய்-ஒலிக்கிறது. ஆனுலும் அதன் பொருள் உனக்குத் தெரியுமே! ஒரு நாள் பிரிவதற்கும் கூசி நடுங்குகின்றன இப்பறவைகள். இவற்றைப் பார்த்தாவது நாம் இறைவனிட

மிருந்து பிரிந்து வந்து எத்தனை நாளாயிற்று என்று எண்ணிப் பார்க்க வேண்டாமா? மறுபடியும் அவனை என்று பெறு வோம் என்ற கவலை வேண்டாமா? பொழுது விடிந்து விட்டது. வீட்டிலே ஆய்ச்சியர் தயிர் கடைகிறார்கள். அவர் கள் கழுத்தில் உள்ள காசு என்ற அச்சுத்தாலியும், பிறப்பு என்ற ஆமைத்தாலியும் கல கலவென்று ஒலிக்கின்றன. கண்ணனுக்கே உரியவர்கள் நாங்கள் என்பதோ இவ்வொலி யின் பொருள்? கையைத் தூக்கமுடியாமல் தூக்கி-அவனைப் பிரிந்த ஆயாசமோ-இவர்கள் கடையும் தயிரொலியும் கேட் கிறது. அவர்களுடைய கலைந்து அவிழ்ந்த கூந்தலிலிருந்து வாசனை கமழ்ந்து வருகிறது. கண்ணனுடைய சேர்க்கை யால் எழுந்த வாசனைதானோ இது? இவற்றையெல்லாம் உணராத உன்னையும் நாயகப் பெண்ணாக, எங்கள் தலைவி யாக, ஏற்றுக்கொண்டோமே! அழகுதான்! இந்த அழகிலே, நாராயணன் என்று பாடுகிறோம்; எளிவந்த பிரானாக வடிவம் கொண்டு நம் கண்முன்னே கண்ணனாக விளையாடுகிறான் என்று புகழ்கிறோம். கேசி என்ற அசுரனைக் கொன்றான், அவனைக் கேசவன் என்று வாழ்த்துகிறோம். நீயோ பேசாமல் இருக்கிறாய். எங்கே, எங்களுக்கு முந்தியே கண்ணனை அடைந்துவிட்டாயோ? அப்படியானால், அந்தத் தேசு, அவன் கரம்பட்ட பேரொளியோடு வந்து கதவைத் திற. அவனை என் றென்றும் பெறுவதற்கு உனக்கும் எங்களுக்கும் வழி செய்'' என்று கோபியர்கள் சொல்வதே இந்தப் பாடல்.

கீசுகீ சென்றெங்கும் ஆனைச்சாத் தம் கலந்து
பேசின பேச்சரவம் கேட்டிலையோ? பேய்ப்பெண்ணே!
காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து
வாச நறுங்குழல் ஆய்ச்சியர் மத்தினால்
ஓசை படுத்த தயிரரவம் கேட்டிலையோ?
நாயகப் பெண்பிள்ளாய்! நாரா யணன்மூர்த்தி
கேசவனைப் பாடவும்நீ கேட்டே கிடத்தியோ?
தேச முடையாய்! திறவேலோர் எம்பாவாய். (7)

---

# கீழ்வானம் வெள்ளென்று

“கிழக்கு வெளுத்தது. வைகறைப் பொழுதில் கட்டவிழ்த்துவிடப்பெற்ற எருமைகள் பனிப்புல் மேய்வதன் பொருட்டுக் காட்டுவெளியில் பல திசைகளிலும் பரவித் திரிந்தன. இப்படித்தான், மெய்ஞானம் உதயமாகும் தருணத்தில் அறியாமை என்பது தறிகெட்டு அலையுமோ? இல்லாவிட்டால், பகவானுடைய தரிசனம் கிட்டிவரும் இந்தச் சந்தர்ப்பத்தில் நீ தூங்கிக் கிடப்பாயோ? எங்களுக்கு அது கிடைத்துவிட்டதா என்று கேட்கிருய். இல்லை; இன்னும் கிடைக்கவில்லை. ஆனுல், அதைத் தேடிச் செல்வதே போதாதா? பக்தி என்ற அந்த இன்பத்திற்கு இணை ஏது? அவனை நோக்கிப் போவதையே பயனுக எண்ணிப் போகின்ற நம்முடைய தோழிமார் எல்லோரையும் உனக்காக நிறுத்தி வைத்து, உன்னை வந்து அழைக்கின்றேம். ஏனு? நீ கண்ணனுடைய அன்புக்குப் பாத்திரமானவள். அவனுடைய குதூகலத்திற்குக் காரணமான பாவை; உன்னை முன்னிட்டுக் கொண்டு சென்ருல், எங்களுக்கும் ஒரு வழி கிடைக்குமென்று தான் உன்னை எழுப்புகிறேம். வா, எழுந்து வா. எல்லோருமாய் தேவாதிதேவனுன அவனைப் பாடிக்கொண்டு போவோம். அப்படிப் போவதே இன்பம். அவனும் கிட்டுவான். தேவாதிதேவனுனல் என்ன? நமக்காகத்தானே அவன் இங்குக் கண்ணனுக வந்தான்; குதிரையாக வடிவெடுத்துத் திரிந்த தேசி என்ற அசுரனை வாய் பிளந்தான்; கம்ஸனுடைய மல்லர்களை வென்ருன். உண்மைதான். நமக்காகவே அவன் இங்கே வந்திருக்கிருன். என்ருலும், இன்னும் நம்மிடம் அவனுகவே வரட்டுமே என்று சோம்பி இராமல், நாமே

தேடிச்சென்று சேவித்தால், அந்த அருளாளன் 'ஐயோ! என்னைத் தேடி அலைந்து நொந்துவிட்டார்களே' என்று அங்கலாய்த்து நம் குறைகளை ஆராய்ந்து, களைந்து அருள மாட்டானா? செய்வான். வா, எழுந்து வா" என்று கோபி யாக நின்று அழைக்கும் ஆண்டாளின் குரலே இந்தப் பாடல்.

கீழ்வானம் வெள்ளென் றெருமை சிறுவீடு
மேய்வான் பரந்தனகாண் மிக்குள்ள பிள்ளைகளும்
போவான்போ கின்றாரைப் போகாமல் காத்து உன்னைக்
கூவுவான் வந்துநின்றோம் கோது கலமுடைய
பாவாய்! எழுந்திராய் பாடிப் பறைகொண்டு
மாவாய் பிளந்தானை மல்லரை மாட்டிய
தேவாதி தேவனைச் சென்றுநாம் சேவித்தால்
ஆவாவென் றாராய்ந் தருளேலோர் எம்பாவாய். (8)

---

## தூமணி மாடத்து

ஆய்ப்பாடியில் இன்னொரு கோபியின் வீட்டு வாசல். குற்றமற்ற மாணிக்கங்கள் அழுத்திச் சமைத்த வீடு அது. அந்த மணி மாடத்தின் உள்ளே, மென்மையான மெத்தை யில் அவள் படுத்து உறங்குகிறாள். நாற்புறத்திலும் மங்கள தீபங்கள் எரிகின்றன. அகில் முதலிய வாசனைப் பொருள்கள் புகையில்லாமல் கமழ்கின்றன. இவள் உறங்கிக் கிடப்பதை, வெளியிலிருந்து பார்க்கும் பாவை நோன்புச் சிறுமியர் அதிசயப்படுகிறார்கள். "விளக்கும் தூபமும் படுக்கையும் எதற்கு? கண்ணன் வருவான் என்று எதிர்பார்த்தா? என்று எண்ணுகிறார்கள். அப்படியானால் தூங்கலாமா? தோழி மாத்திரமா! நம்முடைய மாமன் மகளாயிற்றே? கண்ணன் வரும்போது உறங்கி, அவனை இழந்துவிடுவாளோ என்று கவலைப்படுகிறார்கள். அவள் தாயைக் கூவி அழைத்து

'மாமி, அவளை எழுப்புங்கள்' என்று வேண்டுகிறார்கள். ஏன் பதிலே தரமாட்டேன் என்கிறாள்? ஊமையா? அல்லது அழைப்பொன்றும் காதில் படாதபடிக்கு அவ்வளவு செவிடா என்று கேட்கிறார்கள். "இல்லையடி இல்லை; ஊமையும் இல்லை; செவிடும் இல்லை. அனந்தலோ? நெடுநேரம் கிருஷ்ணானுபவத்தில் திளைத்தவள் இப்போதுதான் படுத்திருக் கிறாளோ? என்று சந்தேகப்படுகிறார்கள். மந்திர வாதம் போல் மயக்கும் உலக இன்பக்கொள்ளை இவளை வசப்படுத்திக் காவலில் வைத்து விட்டதோ? அதனால்தான் இறைவனை அடையவேண்டும் என்ற விழிப்பில்லாமல் நீண்ட உறக்கத்தில் ஆழ்ந்தாளோ என்று கலங்குகிறார்கள். ஆனால், இறைவன் மாமாயன். எந்த இன்பமும், மையலேற்றி மயக்கும் அவனுடைய மாய மந்திரத்தின் முன் நில்லாது. இதைச் சொல்லுவோம். அவனே திருவுக்கு நாயகனான மாதவன். அவனை அடைந்தால் எந்த இன்பத்தைத்தான் பெற முடியாது? இதை இவளுக்கு நினைவூட்டுவோம். இன்பங் களுக்கெல்லாம் எல்லை நிலமான வைகுந்தம் என்ற பேரின்பப் பெருநாட்டுக்கு அவனே தலைவன். அதையும் உரைப்போம். மாமாயன், மாதவன், வைகுந்தன் என்று அவனை நாம் பாடுவதைக் கேட்டும் எழுந்து வராமல் இருப்பாளா?" என்று பேசுகிறார்கள் பாவை நோன்பு நோற்கும் பெண்கள்.

தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரிய
தூபம் கமழத் துயிலணைமேல் கண்வளரும்
மாமன் மகளே! மணிக்கதவம் தாள்திறவாய்
மாமீர்! அவளை எழுப்பீரோ? உம்மகள்தான்
ஊமையோ? அன்றிச்செவிடோ? அனந்தலோ?
ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ?
மாமாயன் மாதவன் வைகுந்தன் என்றென்று
நாமம் பலவும் நவின்றேலோர் எம்பாவாய். (9)

# நோற்றுச் சுவர்க்கம்

நந்தகோகுலத்தில் இன்னொரு பெண்ணின் வீட்டு வாசலில் நின்று, அவளைத் தங்களோடு நோன்பு நோற்க வரும்படி அழைக்கிறார்கள் கோபியர். "என்ன தூக்கமடி தூங்குகிறாய்? முன்னம் ஒரு நாள், தூங்கித் தூங்கி யமன் வாயில் விழுந்த கும்பகருணன் உனக்குத் தோற்றுப்போய், அவனுடைய தூக்கத்தை எல்லாம் உனக்குத் தந்துவிட்டுப் போனானோ? தூங்கினால்—இறைவனை எண்ணாமல் உறங்கினால்—விழுவது கூற்றத்தின் வாயில்தான் என்று எச்சரிக்கை செய்கிறார்கள். உனக்குத்தான் இது தெரியுமே. நோன்பு நோற்று கிருஷ்ணானுபவ ஸுகத்தை எப்போதும் பெறுவதற்குத் திட்டமிட்டாயே! இப்படித் தூக்கத்தின் மூலமாகத்தான் திட்டத்தை நிறைவேற்றுகிறாயோ? நல்லதடி அம்மா, நலலது. ஒரு சமயம் நோன்பு நோற்காமலேயே கண்ணனை அடைந்துவிட்டாயோ? இருக்கலாம். வாசனை பொருந்திய துளவத்தை முடியில் அணிந்த பரம்பொருளாம் நாராயணன், ஏதோ அவனைப் போற்றும் நம்முடைய வெறுஞ் சொல்லையும், பச்சையாக—அவன் அணியத் தகுந்த மாலையாக—ஏற்றுக்கொண்டு, நோன்புப் பரிசான பேரின்பம் என்னும் பறையை நமக்கு அளிக்கும் புண்ணியன் அல்லவா? ஆகவே நோன்பொன்றும் நீ செய்யாமலேயே, அவன் அருள் உன்னை அணைந்துவிட்டதோ? அதைத்தான் எங்களுக்குச் சொல்லேன்.

கதவைத் திறந்துதான் நீ வெளியில் வரவில்லை. வாயைத் திறந்தாவது எங்களிடம் ஒரு வார்த்தை பேசப்படாதா? வாசல் திறவாதார் ஒரு மாற்றம், ஒரு பேச்சுக்கூடவா பேச மாட்டார்கள்? நீ கண்ணனுடைய அருளைப்பெற்ற பாத்திரமானால், அருங்கலமானால், ஆற்ற அனந்தலுடையாளாக, பெருந்தூக்கத்தில் அழுந்தியவளாக இருக்கலாமா? எழுந்து வந்து கதவைத் திற. எங்களுக்கும் கண்ணனை அடையும்

வழியைக் காட்டு. வருகிருயா? நல்லது. மெள்ள வா. கண்ணனேடு கலந்த பரவச நிலையைவிட்டு இந்த உலகத் திற்குப் பொருந்தியபடி எங்களோடு நோன்பு நோற்கத் தடுமாருமல் சிறிது இறங்கி வா. வந்து கதவைத் திற'' என்கிருர்கள். பரிகாசம், தீராத தாபம் இரண்டும் கலந்த பேச்சு இது.

நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனய்!
மாற்றமும் தாராரோ? வாசல் திறவாதார்
நாற்றத் துழாய்முடி நாரா யணன் நம்மால்
போற்றப் பறைதரும் புண்ணியனல் பண்டொருநாள்
கூற்றத்தின் வாய் வீழ்ந்த கும்ப கரணனும்
தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானே?
ஆற்ற அனந்தல் உடையாய்! அருங்கலமே!
தேற்றமாய் வந்து திறவேலோர் எம்பாவாய். (10)

---

## கற்றுக் கறவைக் கணங்கள்

கன்றுடைய பசுக்கூட்டங்களைச் செல்வமாக உடைய வர்கள் நந்த கோகுலத்து ஆயர்கள். பால் கறப்பார்கள்; ஆனல், பசுக்களின் நன்மைக்காகவே. அவ்வளவு மென்மை யான உள்ளம் படைத்தவர்கள். என்ருலும், கண்ணனுடைய பெருமை இவ்வளவா என்று பொறுக்க முடியாதவர்களைப் பகைவர்களாகக் கருதித் தாங்களே அவர்களைத் தேடிச் சென்று, போரிட்டு, அவர்கள் வலிமையை அழிக்கும் வீரம் உடையவர்கள்; குற்றம் ஒன்றும் இல்லாதவர்கள். இந்தக் குலத்தில் பொன்கொடி போலே, காட்டில் தன்னிச்சையாகத் திரியும் மயில் போலே வளரும் கோபி ஒருத்தி—எல்லா வகை யாலும் கண்ணனுக்குப் பொருந்தியவள்; கண்ணனுடைய கலியாண குணங்களில் இடைவிடாது ஈடுபடும் செல்வம் உடையவள். அதோடு அவனுடைய அன்புச் செல்வத்தையும்

படைத்த செல்வப் பெண்டாட்டி. ஆனால், இவளும் உறங்கிக் கிடக்கிறாளே என்ற திகைப்போடு, "ஏன் உறங்குகிறாய்? எழுந்து வா. உன்னுடைய உறன் முறைப் பெண்கள், தோழியர், எல்லோருமாக வந்து உன் முற்றத்தில் நிற்கிறோம்; உனக்கு உகந்த முகில்வண்ணன் பேரைப் பாடுகிறோம். குலத்தாலும், குணத்தாலும் முன்னமேயே நீ பெற்றிருக்கும் அநுபவத்தாலும், எங்களோடு கண்ணன் புகழைப் பாடிச் செல்ல வரவேண்டியவள் அல்லவா நீ? நீ அசையாமலும், பேசாமலும் கிடந்தால் அதன் பொருள்தான் என்னே? ஏனோ இந்த உறக்கம்?" என்று அவளை எழுப்புகிறார்கள் ஆயர்பாடிப் பெண்கள்.

கற்றுக் கறவைக் கணங்கள் பலகறந்து
செற்றார் திறலழியச் சென்று செருச்செய்யும்
குற்றமொன் றில்லாத கோவலர்தம் பொற்கொடியே!
புற்றரவ் வல்குல் புனமயிலே! போதராய்
சுற்றத்துத் தோழிமார் எல்லாரும் வந்து நின்
முற்றம் புகுந்து முகில் வண்ணன் பேர்பாட
சிற்றாதே பேசாதே செல்வப்பெண் டாட்டி! நீ
எற்றுக் குறங்கும் பொருளேலோர் எம்பாவாய். (11)

---

## கனைத்திளங் கற்றெருமை

நந்த கோகுலத்தில் அழியாத நற்செல்வம் படைத்த ஒருவன்—அவனுடைய மாளிகை முற்றத்தில் எருமைகள் நிற்கின்றன. உயிர்களின் வேதனையை நாளும் எண்ணி, அவதாரம் செய்து, தன்னை நெருங்க முற்படாத உயிர்களுக்கும் கருணை பாலிக்கவில்லையா கண்ணன். அவன் வாழ்விக்கும்படியான ஆயர்பாடி இது என்று காட்டுவது போல, இவ்வெருமைகள் தம்முடைய இளங்கன்றுகளை நினைந்து இரங்குகின்றன. இந்த நினைவின் வேகம் ஒன்றே

காரணமாக, தம்மைக் கன்றுகள் அணையாமல் இருக்கும் பொழுதே பாலைச் சொரிகின்றன. இதனால், முற்றம் எல்லாம் ஒரே சேறு. இவ்வளவு கருணை பொங்கும் சூழ்நிலையில், இந்த ஆயர் செல்வன் தங்கையாக வளர்ந்தவள் ஒருத்தி. ஆகவே, இவள் கருணைக்கு எடுத்துக்காட்டாக இருக்க வேண்டும். அப்படி இல்லையே என்று வருந்தி, நோன்பு நோற்க வரும்படி அவளைத் துயிலெழுப்புகிறார்கள் அவளுடைய தோழிமாரான கன்னிப் பெண்கள்.

"மேலேயிருந்து தலையிலே மழை; கீழே சேருகிய முற்றம்; நடுவிலே கண்ணன்மேல் மால்கொண்டு தவிக்கும் உள்ளம். இப்படியாக இந்த மார்கழிக் குளிரில் நின்று கொண்டு உன்னை அழைக்கிறோம். இதைக் கேட்டு, எங்கள் துயரத்தைப் போக்க நீ ஓடிவர வேண்டாமா? கருணை வடிவான இறைவனுக்கும், தன்னைச் சேர்ந்தாரைத் துன் புறுத்துவோர் பேரில் சினம் வரும். இது உனக்குத் தெரியும்படி, சினத்தினால் தென்னிலங்கைக் கோமானை அழித்த இராமன் புகழைப் பாடுகிறோம். அப்போதும் நீ வாய் திறக்கவில்லையே! அவனுடைய இந்தச் சினந்தான் அவனை நம் மனத்துக்கினியனாக்குகிறது. இதை எண்ணி யாவது நீ வரவேண்டாமா? உன்னை இப்படி நாங்கள் அழைப்பது ஊரார் எல்லோருக்கும் தெரிந்துவிட்டதடி. இனி மேல் உறங்கினால் அவமானம்; எழுந்து வா" என்று அழைக்கிறார்கள்.

கனைத்திளங் கற்றெருமை கன்றுக் கிரங்கி
நினைத்து முலைவழியே நின்றுபால் சோர
நனைத்தில்லம் சேறாக்கும் நற்செல்வன் தங்காய்!
பனித்தலை வீழநின் வாசல் கடைபற்றிச்
சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற
மனத்துக் கினியானைப் பாடவும்நீ வாய்திறவாய்!
இனித்தான் எழுந்திராய் ஈதென்ன பேருறக்கம்?
அனைத்தில்லத் தாரும் அறிந்தேலோர் எம்பாவாய். (12)

## 19

# புள்ளின் வாய் கீண்டானை

"வெள்ளி எழுந்தது, வியாழன் மறைந்தது. இது விடியற்காலம் என்பது தெரியவில்லையா? பறவைகள் கலகல வென்று ஒலித்தன. நாம் போய் எழுப்ப வேண்டிய சில பெண் களுங்கூட, தாமாகவே எழுந்து நோன்பு நிறைவேற வேண்டிய பாவைக்களம் நோக்கிப் போய் விட்டார்கள், கண்ணனை அங்கே காணலாம் என்னும் ஆசையால். போகும்போது, அவனுடைய வீரத்தையும் புகழையும் எங்களைப் போலவே பாடிக்கொண்டு சென்றார்கள். கொக்கின் வடிவில் வந்த பகாஸுரன் வாயை இரண்டாகப் பிளந்தான் இறைவன்; நம்மை வஞ்சிக்கும் தீமையை அப்படித்தான் அழிப்பான். பொல்லா அரக்கனான இராவணனை, சிறு துரும்புபோலே கிள்ளி எறிந்து, தீய அரக்கர் பூண்டே இல்லாமல் களைந்தான்; நம்முடைய மனம் என்னும் வயலையும் பக்திப் பயிர் வளர் வதற்காக இப்படித்தான் நேராக்குவான். வா, உறக்கம் விட்டு எழுந்து வா. 'ஓ. நான் எதற்கு வரவேண்டும்! பூவில் வண்டு புரளுவது போன்ற அழகிய கண்கள், போதரிக் கண்கள் எனக்கு. இந்த அழகிலே திளைக்க அவன் தானாகவே வருவானே' என்று எண்ணுகிறாயா? வரலாம். ஆனால், அவனைத் தேடிக் கொண்டு செல்கின்ற பக்தி வெள்ளத்தில் எங்களோடும் அவனோடும் நீயும் குதித்து, குளிரக் குளிர நீராட வேண்டாமா? இதை விட்டு, தனியே கண்ணனைப் பெற்றுக் களிக்கலாம் என்று எண்ணுகிறாயோ? இந்தக் கபடத்தை விட்டுவிடு. எங்களோடு கலந்துகொள். உன் னுடைய போதரிக் கண்ணின் அழகுக்காகவே கண்ணன் வருவதாக இருந்தாலும், எங்களோடு நீ வந்தால், உனக்காக வருகின்ற அவன் எங்களுக்கும் அருள மாட்டானா? இந்த உதவியை நீ எங்களுக்குச் செய்யப்படாதா?" என்று தூங்கும் ஒருத்தியை எழுப்புகிறார்கள் ஆயர்பாடிப் பெண்கள்.

புள்ளின்வாய் கீண்டானைப் பொல்லா அரக்கனைக்
கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடிப்போய்ப்
பிள்ளைகள் எல்லாரும் பாவைக் களம்புக்கார் ;
வெள்ளி எழுந்து வியாழம் உறங்கிற்று ;
புள்ளும் சிலம்பினகாண்—போதரிக் கண்ணினாய் !
குள்ளக் குளிரக் குடைந்துநீ ராடாதே
பள்ளிக் கிடத்தியோ ? பாவாய் !—நீ நன்னாளால்
கள்ளம் தவிர்ந்து கலந்தேலோர் எம்பாவாய். (13)

---

## உங்கள் புழைக்கடை

" நம்முடைய புழைக்கடைத் தோட்டத்துக் குளத்தில், செங்கழுநீர்ப்பூக்கள் மலர்ந்தன. இரவில் மட்டும் மலரும் ஆம்பல் மலர்கள், இதழ்கள் கூப்பி வாய் மூடின. விடியற் காலம் வந்துவிட்டது. இறைவனை வழிபடும் தருணம் வந்து விட்டது என்று இவை சொல்லுகின்றன. இந்த உலகமே நம்முடைய புழைக்கடைத் தோட்டந்தான். ஒவ்வொரு கணமும் அங்கே காணக் கிடைக்கும் காட்சி, இறைவனை நோக்கித் திரும்ப இதுவே தருணம் என்பதைத்தான் சொல்லுகிறதோ ? இதை உணர்ந்து, மற்றெல்லா வற்றையும் துறந்த துறவிகள், காவித்துணி உடுத்தி, உலக பந்தம் எதையும் சுவைக்காதவர் என்பதைக் காட்டும் வெள்ளைப் பற்களோடு, தத்தம் முறைப்படி ஆண்டவனை வணங்கக் கோயிலை அடைந்தார்கள், உள்ளமாகிய கோயிலை. இதைப் பார்த்தும் உறங்கலாமா ? உலகமெங்கும், உன்னுடைய புழைக்கடையிலும், 'உறங்காதே, உறங் காதே' என்று மலர்கின்ற சத்தியத்தை ஏற்க வேண் டாமா ?" என்று தூங்குகின்ற கோபியை, ஆயர்பாடிப் பெண்ணாகத் தன்னை ஆக்கிக் கொண்ட ஆண்டாள் எழுப்பு கிறாள். " இத்தனைக்கும், நீயே எங்களுக்கு முன்னர் எழுந்து எங்களை எழுப்புவதாக வாய் வீச்சு வீசினாய். பெரியவள் தான் ! அம்மா, நங்கைதான் நீ. நாணமில்லையா ? அதைச்

செய்வேன், இதைச் செய்வேன் என்று நீட்டி முழக்கும் நாக்கு இருந்தால் போதுமா? இரு; அந்த நாக்கும் ஒரு நன்மைதானடி. சங்குச் சக்கரம் ஏந்திய நீண்ட கரங்களை உடையவன்; அறிவதற்கு அரியவன்; ஆயினும் கருணை பொழியும் தாமரைக் கண்ணன்; அதனால் நம் சிற்றறிவும் அறியும்படி தன்னை நமக்குத் தருபவன்; என்று பாடிக் கொண்டு செல்வதல்லவா நாக்குப் படைத்ததன் பயன்? வா, இதைச் செய்வோம். இதுவே இன்பம்" என்று தூங்கும் உயிரைத் துயிலெழுப்புகிருள் ஆண்டாள்.

உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள்
செங்கழுநீர் வாய்நெகிழ்ந் தாம்பல்வாய் கூம்பினகாண்
செங்கற் பொடிக்கூறை வெண்பல் தவத்தவர்
தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போகின்ருர்
எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும்
நங்காய்! எழுந்திராய் நாணுதாய்! நாவுடையாய்!
சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன்
பங்கயக் கண்ணனைப் பாடேலோர் எம்பாவாய். (14)

---

## எல்லே இளங்கிளியே

நோன்பு நோற்கும் பெண்கள் கடைசியாகத் தோழி ஒருத்தியின் வீட்டு வாசலை நெருங்குகிருர்கள். உள்ளே இருந்து 'சங்குச் சக்கரம் ஏந்து தடக்கையன்', 'பங்கயக் கண்ணன்' என்று இவர்கள் பாடி வந்த பாட்டு, மதுரமான தனிக்குரலில் வருகிறது. 'நம் தோழியல்லவா இவ்வளவு இனிமையாகப் பாடுகிருள்!' என்று அவளை 'இளங்கிளியே' என்று அழைக்கிருர்கள். இன்னும் தூக்கமா? என்று வேடிக்கையாகக் கேட்கிருர்கள் பெண்கள். உள்ளே இருக்கும் அவளுக்கோ இறைவனைப் பாடும் இன்பம் சிதைகிறது. 'அடீ அம்மா, ஏனே இப்படிக் கூச்சல் போடுகிறீர்கள்?' என்று கேட்டுவிட்டுத் தளர்ச்சியுடன், 'உங்கள் வாயைக் காட்ட வேண்டாம்; இதோ நானே வந்துவிடுகிறேன்'

என்கிருள் வீட்டிற்குள் இருப்பவள். வெளியில் உள்ள ஒருத்தி பேசுகிருள்: 'வாயைக் காட்டுகிருேமா? உன் வாய்க்கு உரைபோடக் காணுமோடி?' என்கிருள். உள்ளே இருப்பவள் 'நீங்கள்தான் பேச்சிலே வல்லவர்கள்' என்று தொடங்குகிருள். உடனே, கண்ணனைக் காணத் துடிக்கும் நிலையில், தானும் அவர்களும் ஒன்ருக இருப்பது நினைவுக்கு வருகிறது. 'கடவுள்-காதல்கொண்ட இவர்களிடம் குற்றம் ஏது? இருந்தால் அது என்னுடைய குற்றமே' என்று எண்ணுகிருள். 'போகட்டும் நானே பேச்சுக்காரியாக இருந்து விட்டுப் போகிறேன். இப்போது என்ன செய்ய வேணடுமாம்?' என்று கேட்கிருள். வெளியிலிருந்து ஒருத்தி சொல்கிருள்: 'நீ உடனே எழுந்து வா. அதுதான் வேண்டும். நீ மாத்திரம் தனியாக இறைவனை அனுபவிக்க முற்படுவது முறையோ?' என்கிருள். 'அது சரிதான்; ஆனுல், எல்லோரும் வந்துவிட்டார்களா?' என்று வீட்டுக்குள்ளிருக்கும் பெண் கேட்க, வெளியிலிருந்து 'வந்துவிட்டார்கள்; நீயே வந்து பார்த்து எண்ணிக் கொள்ளேன்' என்ற பதில் வருகிறது. 'கண்ணனுடைய ஆற்றல் எல்லையற்றது. குவலயா பீடம் என்ற வலிய யானையைக் கொன்ருன்; பகைவருடைய செருக்கை அழித்தான். இவ்வளவு ஆற்றல் படைத்தவன் நமக்கு எளியன் ஆனுன். இதுவே அவன் மாயம். அவனைப் பாடிக்கொண்டு செல்வோம்' என்று ஆயர் சிறுமியர் புறப்படுகிருர்கள்.

எல்லே! இளங்கிளியே! இன்னம் உறங்குதியோ!
சில்லென் றழையேன்மின் நங்கைமீர்! போதர்கின்றேன்
வல்லை உன் கட்டுரைகள் பண்டேயுன் வாயறிதும்
வல்லீர்கள் நீங்களே நானே தான் ஆயிடுக
ஒல்லைநீ போதாய் உனக்கென்ன வேறுடையை
எல்லாரும போந்தாரோ? போந்தார்போந் தெண்ணிக்கொள்
வல்லானை கொன்ருனை மாற்ருரை மாற்றழிக்க
வல்லானை மாயனைப் பாடேலோர் எம்பாவாய். (15)

## நாயகனாய் நின்ற

தமது தோழிமார் பலரைத் துயில் எழுப்பித் தம்மோடு சேர்த்துக்கொண்டு, எல்லோருமாக நந்தகோபனுடைய அரண்மனையை அடைகிறார்கள், ஆயர்பாடியில் நோன்பு நோற்கும் பெண்கள். நந்தகோபன் ஆயர்பாடியின் அரசன், அந்த வகையில் அவன் நாயகனாக நிற்கிறான். கடவுள் இதோ என்று ஞானம் நல்கும் ஆசார்யனைப்போல, இந்த நந்தகோபனும் கண்ணனை நந்த கோகுலத்தில் வைத்து வளர்த்து, கோபியர்க்குக் கிட்டும்படி செய்திருக்கிறான். இந்தப் பேருதவியைப் பெற்ற கோபியர், அவனை நாயகன் என்று வாழ்த்துகிறார்கள். இப்படி இரண்டு வகையில் நாயகனான நந்தகோபன் கோயிலை அடைந்து அதன் காவற்காரனை 'அப்பா, நாங்கள் நெருங்கலாமா?' என்று கேட்கிறார்கள். அவனுக்கப்பால், தோரண வாசலைக் காத்து நிற்கும் ஒருவன், அவனை நெருங்கி 'கதவைத் திறந்துவிடு; பயப்படாதே' என்று கூற, அவர்கள் 'நாங்கள் ஒரு தீங்கும் எண்ணாத ஆயர்குலச் சிறுமியர்; சிறுமியர் என்று அலட்சியம் செய்யாதே. எங்கள் நோன்பு நிறைவுக்கான பறை ஒன்றை எங்களுக்குத் தருவதாகக் கண்ணபிரான் சொல்லி அருளினான். எங்களைப் போகவிடு' என்று பேசுகிறார்கள். உண்மைதானே! இறைவனுக்கும் உயிர்களுக்கும் உள்ள தொடர்பு அனாதியானது. அன்றே— உயிர்களைப் படைத்த அன்றே, அவர்களை மீட்டு உய்விக்கவும் இறைவனுடைய கருணை உறுதி தந்தது. ஆனால் உய்வைக் கூட எண்ணாமல், அவனை நோக்கித் திரும்பி, அவனைத் தன் உணர்விலே எழுப்புவதற்காக அவன் புகழைப் பாடுவதையே பயனாகக் கருதுகிறது அவனை நெருங்கும் உயிர். இதையே ஆயர் சிறுமியர் வாக்காக ஆண்டாள் பாடுகிறாள். 'கண்ணனைக் காண வேண்டும்; அவனைப் பாட வேண்டும். அவன் தருவதாக வாக்களித்த பறைகூட எங்களுக்குப் பெரிதில்லை. கதவைத் திற, அப்பனே, கண்ணனுக்கு எங்களால் தொந்தரவுண்டாகுமோ என்று அவனிடம்

பரிவுடைய இந்த நேச நிலைக் கதவு அடைத்திருக்கிறதோ? அதைத் திறந்து எங்களை உள்ளே போகவிடு' என்று வேண்டுகிறார்கள் இடைக்குலச் சிறுமியர்.

நாய கனாய்நின்ற நந்தகோபன் உடைய
கோயில் காப்பானே! கொடித்தோன்றும் தோரண
வாயில் காப்பானே! மணிக்கதவம் தாள்திறவாய்
ஆயர் சிறுமிய ரோமுக்கு அறை பறை
மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்
தூயோமாய் வந்தோம் துயிலெழப் பாடுவான்
வாயால் முன்னமுன்னம் மாற்றாதேஅம்மா! நீ
நேய நிலைக்கதவம் நீக்கேலோர் எம்பாவாய். (16)

---

## அம்பரமே தண்ணீரே

நந்தகோபன் அரண்மனைக்குள், கண்ணனைக் காணச் சென்ற ஆய்ப்பாடிப் பெண்கள், முதலில் அவனைத் துயிலெழுப்புகிறார்கள். 'நீ எங்கள் அரசன்; சோறும், தண்ணீரும், கூறையும் எங்களுக்கு ஒன்றையும் எதிர்பாராமல் அளிக்கிறாய். எங்கள் உடலுக்கு நீ செய்த தருமம் இது' என்று பேசுகிறார்கள். 'எங்கள் உயிருக்குக் கண்ணனே சோறும் கூறையும். அவனை எங்களுக்குக் கிடைக்கும்படி செய்வது உன் அறமாகும்' என்ற குறிப்பு அவர்கள் பேச்சில் தொனிக்கிறது. அரண்மனை இரண்டாங்கட்டில், பெண்களுக்கெல்லாம் முதன்மையானவளாய், கண்ணனுடைய தாயாக இருக்கும் பேறு பெற்றதால் பெண்குலத் தீபமாய் விளங்கும் யசோதை இருக்கிறாள். அவளை எழுப்பி, அவள் அனுமதியைப் பெற்று அப்பால் செல்லுகிறார்கள், ஞானாசிரியன் வாழ்த்துடன் ஆண்டவனிடம் நெருங்கும் அடியவனைப்போல. அங்கே, மூன்றாம் கட்டில், கண்ணனுக்குப் பள்ளி எழுச்சி பாடுகிறார்கள். 'வானவெளியை ஊடறுத்து

உலகங்கள் அனைத்தையும் அளந்த தேவதேவன் நீ. உனக்கு உண்மையில் உறக்கம் ஏது? எங்கள் உய்வு இன்னும் வரவில்லை. அதற்குத் தகுதி நாங்கள் பெறவில்லையோ? ஆகவே நீ உறங்குவதுபோல எங்களுக்குத் தோன்றுகிறதோ? அந்தத் தோற்றத்திலிருந்து எங்களை விடுவித்தால், எங்களைப் பொறுத்தவரையில் நீ எழுந்துவிடுகிறாய். வீழ்ந்திருக்கும் நாங்களும் எழுந்து விடுகிறோம்' என்று கண்ணனை வாழ்த்துகிறார்கள். பக்கத்தில் அவனோடு இணைபிரியாதிருக்கும் பலதேவனைப் பார்க்கிறார்கள். 'பொன்கழல் அணிந்த பலதேவா, உன் பாக்யம் எங்களுக்கும் கிட்டவேண்டும்; என்றும் நாங்கள் கண்ணனோடு இணைபிரியாமல் இருக்கவேண்டும். உனக்கு வசப்பட்டுப்போனான். அவனை எப்படி உன் வசமாக்கினாய்? அந்த மந்திரத்தை எங்களுக்கு எழுந்து உணர்த்தக் கூடாதா? உறங்காதே. எங்களுக்காக கண்ணனையும் உறங்கவிடாதே' என்று பலதேவனை வேண்டுகிறார்கள்.

அம்பரமே தண்ணீரே சோறே அறம் செய்யும்
எம்பெருமான்! நந்த கோபாலா! எழுந்திராய்;
கொம்பனார்க் கெல்லாம் கொழுந்தே! குலவிளக்கே!
எம்பெருமாட்டி யசோதாய்! அறிவுறாய்
அம்பரம் ஊடறுத் தோங்கி உலகளந்த
உம்பர் கோமானே! உறங்கா தெழுந்திராய்
செம்பொன் கழலடிச் செல்வா! பலதேவா!
உம்பியும் நீயும் உறங்கேலோர் எம்பாவாய். (17)

---

## உந்து மத களிற்றன்

கண்ணன் எழுந்து வரவில்லை. அவனுடைய பள்ளியறைக்கு வெளியே நின்று அவனை அழைத்துப் பார்த்த பெண்கள், கலங்குகிறார்கள். 'இனி யார் நமக்குத் துணை' என்று ஏங்குகிறார்கள். 'தவறு செய்துவிட்டோம். பிராட்டியின்

அருள் இல்லாமல் - அவள்தானே பகவானுடைய கருணை வடிவம் - அவள் உதவி இல்லாமல் அவனை எப்படிப் பெற முடியும்? நாம் கண்ணனை அடைவதற்கு, அவனோடு இணை பிரியாமல் இருக்கும் நப்பின்னையைத் துணையாகக் கொள் வோம். அவள் கண்ணனோடு இப்போது இருக்கிறாளோ? ஆம், அப்படித்தான். அவளைத் துணைக்கு அழைப்போம்' என்று பாடுகிறார்கள்.

'யானை போன்ற வலிமை உடையவன் நந்தகோபன். போரிலே புறங்காட்டாத தோள் வலிமை உடையவன். அவ னுடைய மருமகளான நப்பின்னை நீ. கண்ணனோடு நீ இருப் பதை யாரால் தடுக்க முடியும்? தடுத்தால் நந்தகோபன் இருக்கிறான், தடுப்பாரைத் தடுத்து நிறுத்த! எங்களுக்கு அப்படி உதவி ஒன்றுமில்லை. ஆண்டவனை நெருங்குவதற்கு ஆயிரம் தடைகள். ஏதோ ஒருவாறு, அவற்றைச் சமாளித்து எவ்வளவு தூரம் வந்துவிட்டோம். வந்தும் அவனைக் காண முடியவில்லை. அவனை அடைந்த நீதான் எங்களுக்கு அவனைக் காட்டித் தரவேண்டும். கதவைத் திற. கிருஷ் ணனுபவம் என்ற பரிமளம் கமழ்கின்ற கூந்தலுடையாளே, அந்த நறுமணத்தோடு எங்கள்முன் வா. அந்த மணம் எங்கள் விடாயைத் தீர்க்கும். இறைவனை அடைய முடியாமல் தத்தளிப்பார்க்கு அவனை உணர்ந்த, அனுபவித்த பாக்கியவதிதானே தாரகம்? வா, பொழுது விடிந்துவிட்டது. இதோ கேள், கோழிகள் எங்கும் கூவுகின்றன. மாதவிப் பந்தலில் குயில்கள் குரலெழுப்புகின்றன. எங்களால் இந்தத் தாபத்தை இனித் தாங்க முடியாது. கண்ணன் பக்கத்திலும், அவனை அணைக்கும்போதும் விளையாடும் பந்தைக் கையை விட்டு நழுவ விடாமல் வைத்திருக்கும் பேதைப் பெண்ணாகிய நீதான், சிறுமியரான எங்கள தவிப்பை அறியமுடியும். வா, வளையல்கள் ஒலிக்க, வந்து கதவைத்திற. கண்ணன் அருளை முழுவதும் பெற்ற உன் உள்ளத்தையும் திறந்து, அங்கே எங்களுக்கும் இடங்கொடு' என்று மன்றாடுகிறார்கள்.

உந்து மதகளிற்றன் ஓடாத தோள்வலியன்
நந்த கோபாலன் மருமகளே! நப்பின்னய்!
கந்தம் கமழும் குழலீ! கடை திறவாய்
வந்தெங்கும் கோழி யழைத்தனகாண் மாதவிப்
பந்தல்மேல் பல்கால் குயில்இனங்கள கூவினகாண்
பந்தார் விரலி! உன் மைத்துனன் பேர்பாடச்
செந்தாமரைக் கையால் சீரார்வளை ஒலிப்ப
வந்து திறவாய் மகிழ்ந்தேலோர் எம்பாவாய். (18)

## குத்து விளக்கெரிய

கண்ணனுடைய பள்ளியறைக் கதவு திறக்கவில்லை. இறைவனுடைய மணங் கமழ, நப்பின்னையும் வெளியே வரவில்லை. வெளியிலே காத்துக்கிடக்கும் ஆயர் பெண்கள் திகைக்கிருர்கள். விரகதாபம் அவர்களை நெருப்பாக எரிக்கிறது. 'ஒரு சமயம் நப்பின்னையைப் பிரிய மனமில்லாத கண்ணன்தான் அவளை வெளியில் வராமல் தடுத்து விட்டானே?' என்று எண்ணுகிருர்கள். அவ்வளவுதான். பக்தி ஆவேசத்தில், கண்ணனுடைய பள்ளியறைக்குள்ளேயே, துடிக்கின்ற அவர்கள் மனம் போய் விடுகிறது. அங்கே அது காண்பதென்ன? குத்துவிளக்கின் ஒளியில், கிருஷ்ணனுடைய முக லாவண்யத்தைப் பருகியவண்ணம்—அதற்காகவே குத்து விளக்கு எரிகிறது—தந்தத்தால் ஆன கட்டிலில் மென்மையான பஞ்சணையில் நபபின்னை சயனித்திருக்கிருள். அவளை வெளியில் போகாவண்ணம் இறுகத் தழுவி இருக்கிருன் கண்ணன். அவன் அருளுக்கு உகந்தவர்களை இப்படித்தான் விடாமல் இறைவன் பற்றிக்கொள்வானே? 'கண்ணு, எங்கள் ஆன்ம நாயகனுன உன்னிடம் இதையே வேண்டுகிருேம். எங்களை உன் உடைமையாக்கிக் கொள். விடாமல் எங்களைப் பற்றிக்கொள். செய்கிறேன் என்று

வாய் திறந்து ஒரு வார்த்தை சொல்லடா' என்று கதறு கிறார்கள். கருணை வள்ளலாகிய அவன் அன்பர் வேதனை யைப் பொறுப்பானா? அருள்வதற்காக, அவர்கள் துயரத் தைத் துடைப்பதற்காகத் திரும்புகிறான். அதற்குள் கடலி னும் பெரிய தன் கரு விழியால் கண்ணனிடம் 'என்னை விட்டுப் போகாதே' என்கிறாள் நப்பின்னை. இதைப் பார்த்து விடுகிறார்கள் ஆயர் பெண்கள். 'நியாயந்தான், அம்மா. அவனைப் பிரிந்து உன்னால் ஒரு கணங்கூட இருக்கமுடியாது. முடியாது என்பது காதல் நெருப்பில் வேகும் எங்களுக்குத் தெரியாதா? ஆகவே அவனை விடமாட்டேன் என்று சாதிக் கிறாய். பள்ளியறையிலிருந்து வெளிவராமல் தடுக்கிறாய். ஆனால்...ஆனால்...எங்கள் உள்ளம் அவனை எண்ணி எண்ணி, அவனை என்று அடைவோம் என்று துடிக்கிறதடி. முன்பே, முதல் முன்பே அவனைப் பெற்றிருக்கிறாய். ஆகவே உலகுக்கெல்லாம் தாயான அந்த நிலையில், எங்களையும், இந்த உயிர்களையும் அவனிடம் சேர்க்க வேண்டியது உன் பொறுப்பு. கருணை உள்ளம் படைத்திருக்கிறாய். கருணையே வடிவானாய். ஆகவே, எங்களிடம் கருணை காட்டு வது உன் இயல்பு. உன் நிலைக்கும் உன் இயல்புக்கும் பொருந்தாத வகையில், எங்களுக்கு அருள்வதை நீ தாமதப் படுத்தலாமா?'

இப்படி நப்பின்னையைக் கேட்கிறார்கள், ஆயர்குலப் பெண்கள். ஆனால், இவ்வளவும்—பள்ளியறைக் காட்சி, கண்ணனுடைய அருள் முனைப்பு, நப்பின்னையின் தடுப்பு, இவர்கள் வேதனை வெறி—இவ்வளவும், கடவுட் காதல் கொழுந்துவிட்டெரியும் அவர்களுடைய மனத்தில்—அதா வது, ஆண்டாளுடைய மனத்தில் நடைபெறுகிறது. அவ ளுடைய பக்திப் பெருங்கடலில் எழுந்து பகவானைத் தொடு கின்ற எல்லையற்ற பேருணர்ச்சி அலை இந்தப் பாடல்.

குத்து விளக்கெரிய கோட்டுக்கால் கட்டிலின் மேல்
மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறிக்
கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்
வைத்துக் கிடந்த மலர்மார்பா! வாய்திறவாய்
மைத்தடங் கண்ணினாய்! நீயும்உன் மணாளனை
எத்தனை போதும் துயில்எழ ஒட்டாய்காண்
எத்தனை யேலும் பிரிவாற்ற கில்லாயால்
தத்துவம் அன்று தகவேலோர் எம்பாவாய். (19)

---

## முப்பத்து மூவர்

ஆற்றாமையினாலே நப்பின்னையைக் குறை கூறியதை எண்ணித் துணுக்குறுகிறார்கள் ஆயர்குலப் பெண்கள். நம்முடைய தலைவி அல்லவா அவள்; உயிர்க் குலத்தின் தாய் அல்லவா? தஞ்சம் என்று அடுத்தவரைக் காப்பது முதலில் யார் என்பதிலே இருவரும் போட்டி இட்டுக்கொண்டதால், கண்ணனும் நப்பின்னையும் வருவதற்குத் தாமதமாயிற்றோ என்று எண்ணுகிறார்கள். எப்படி இருந்தால் என்ன? தாமதம் தாமதந்தானே! அதை இவ்வேழைகளால் தாங்க முடியவில்லையே என்று தவிக்கிறார்கள். எங்கள் துன்பம் ஒருபுறம் இருக்கட்டும். அருள்வதற்குத் தாமதிப்பதால், பகவானுடைய அலகிலாப் பெருங்கருணைக்கல்லவா குறைவு வந்துவிடுகிறது? அவன் எத்தன்மையன்? முப்பத்து முக் கோடி தேவர்களுக்கும், துன்பம் வருமுன்னே, தானாகவே சென்று, அவர்களுடைய நடுக்கத்தைப் போக்கும் கருணா மூர்த்தியாயிற்றே! 'தேவர்கள் சாகாவரம் பெற்றவர்கள்; நாங்களோ உன் பிரிவு தாங்காமல் சாகிறோம். அவர்களுக்குத் துன்பம் வருமுன் நீயாகப் போய், அதை விலக்குகிறாய்; நாங்களோ துயர் வந்து துடிக்கிறோம். வரவேண்டிய கஷ்டம் உனக்கு வைக்காமல் நாங்களே உன் வாசலுக்கு

வந்து விட்டோம். இன்னுமா உறக்கம்?' என்று கேட்கிறார்கள். 'கருணையிருந்தால் போதுமா? காப்பதற்கு ஆற்றல் வேண்டாமா என்று உன்னைப் பற்றி எப்படி எண்ணுவது? நீ செப்பம் உடையவன். காப்பதே கடமையாகக் கொண்டவன். அதற்கான திறனும் உடையவன். உலகத்திலோ உள்ளத்திலோ அடியவர்க்கு விரோதிகள் உண்டானால் அவர்களைப் பொசுக்குவாய். வெப்பத்தைக் காட்டும் நீ, அடியவர்க்காக அதைக் காட்டுவதால் அல்லவா விமலனாக நிற்கிறாய்? இந்த துஷ்ட நிக்ரஹ வெப்பத்தை எங்களிடமா, இந்த அடிமைகளிடமா காட்டுவது? துயிலெழுந்து வா' என்று வேண்டுகிறார்கள். நப்பின்னையை நோக்கித் திரும்புகிறார்கள். 'அழகனான இறைவனையும் தன்னுடையதாக்கிக் கொள்ளும் அழகு நிறைந்தவளே! உன்னாலே, பெருமைக்கெல்லாம் பெருமையான அவனுக்கும் பெருமை உண்டாகும்படியான ஏற்றமுடைய திருவே! நீதான் எழுந்து வந்து எங்களைக் காக்கவேண்டும். நீ சொன்னால் உன் மணாளன் தட்ட மாட்டான். எங்கள் நோன்பு நிறைவேறுவதற்காக, ஆலவட்டத்தையும் அதாவது, 'நான், எனது' என்பவற்றிலிருந்து விடுதலையும், கண்ணாடியும், அதாவது ஆத்மஞானத்தையும், எல்லாவற்றையும்விட அவனையும் எங்களுக்குத் தந்து எங்களைக் கிருஷ்ணானுபவத்தில் முழுகும்படி செய்துவிடு' என்று நப்பின்னையை இறைஞ்சுகிறார்கள்.

முப்பத்து மூவர் அமரர்க்கு முன்சென்று
கப்பம் தவிர்க்கும் கலியே! துயிலெழாய்
செப்பம் உடையாய் திறலுடையாய் செற்றார்க்கு
வெப்பம் கொடுக்கும் விமலா! துயில்எழாய்
செப்பன்ன மென்முலைச் செவ்வாய்ச் சிறுமருங்குல்
நப்பின்னை நங்காய்! திருவே! துயில்எழாய்
உக்கமும் தட்டொளியும் தந்துன் மணாளனை
இப்போதே எம்மைநீ ராட்டேலோர் எம்பாவாய். (20)

---

## ஏற்ற கலங்கள்

ஆயர்குலப் பெண்களின் பக்தி முறையீட்டைக் கேட்டு, மனம் கனிந்து, நப்பின்னை வெளியே வருகிருள். 'நானும் உங்களில் ஒருத்தி' என்று அவர்களோடு சேர்ந்துகொள்ளுகிருள். எல்லோருமாகச் சேர்ந்து, கண்ணன் புகழைப் பாடி அவனைத் தங்களிடையே எழுந்து வரவேண்டுமெனத் துதிக்கிருர்கள். 'ஐயனே; அளவில்லாத செல்வத்திற்கு நீ அதிபதி என்பதற்கு இந்த நந்த கோகுலம் சாட்சி. ஏந்தும் கலங்கள் பொங்கி வழியும்படி, எண்ணற்ற பசுக்கள் இங்கே இடைவிடாமல் பால் சொரிகின்றன; இவற்றை உடையவன் நந்த கோபன். அவன் மகன் நீ. ஆகவே இந்தச் செல்வம் உன்னுடையது. ஆனுல், இதற்காகவா நீ வந்தாய்? இல்லை. அடியவர்களைக் காக்க வேண்டுமென்ற ஊற்றத்தால்—உறுதியால்—வந்தாய். ஆனுல் நீ பெரியவன். உயர்வு அற உயர் நலமுடையவன். இங்கு வராமலேயே எங்களை உன்னுல் காக்க முடியும். பின் ஏன் வந்தாய்? இங்கேயே, இந்த மண்ணுலகிலேயே, எங்களுக்கு உன் தரிசனம் கிடைக்க வேண்டும் என்ற கருணையினுல் வந்தாய். இந்த உலகில், எங்கள் நிலைக்கு இரங்கி, எங்களைப் போலப் பிறந்து, உன் அருளின் அலகிலாத் தன்மையை நிலைநாட்டினுய். ஆனுல் ஒன்று. பிறந்தாய் என்ருலும் இவ்வுலகத்தின் கறை உன் மேல் படியுமா? பிழை அனைத்தும், தூசு அனைத்தும் சுட்டெரிக்கும் சுடராக, அமலனுகவே நீ விளங்குகிருய்' என்று வாழ்த்திக்கொண்டு போகும்போதே, தங்களுக்காகப் பிறந்த அவன் ஏன் தங்கள் முன் வரத் தாமதிக்கிருன் என்ற எண்ணம் அப்பெண்களுக்கு வருகிறது.

'கண்ணு, எங்கள் உயிரின் அரசே, உன்னேடு மாறி நிற்பவர்கள், மாருத அறமாக உள்ள உன் வலிமைக்குத் தோற்று, உன் வாசலில் வந்து அடி பணிவார்கள். நாங்களும் அப்படித்தான் ஆற்ருமல் ஓடி வந்தோம். ஆனுல்...

அவர்கள் உன் ஆற்றலுக்குத் தோற்ருர்கள். நாங்களோ, உன் அழகுக்குத் தோற்ருேம்; உன் அருளுக்குத் தோற்ருேம்; தோற்கவே ஆசைப்படுகிருேம். ஐயனே, என்றென்றும் உன் அழகும், அருளும் எங்கள் கண்முன் தோற்றமாய் நிற்க அருள்புரி; அதிலே என்றென்றும் மயங்கி, எங்கள் இன்பப் போதையிலே உன்னைப் போற்றி நிற்கும் புண்ணியத்தைத் தா. அதற்காகத்தானே 'வா, கண் முன்னே வா' என்று உன்னை அழைக்கிருேம்' என்று ஆயர் பாடிப் பெண்களோடு ஒன்ருக நின்று பேசி, ஆண்டாள் உருகுகிருள்.

ஏற்ற கலங்கள் எதிர்பொங்கி மீதளிப்ப
மாற்ருதே பால்சொரியும் வள்ளல் பெரும்பசுக்கள்
ஆற்றப் படைத்தான் மகனே! அறிவுருய்
ஊற்றம் உடையாய்! பெரியாய்! உலகினில்
தோற்றமாய் நின்ற சுடரே! துயிலெழாய்
மாற்ருர் உனக்கு வலிதொலைந்து உன் வாசற்கண்
ஆற்ருது வந்துஉன் அடிபணியு மாபோலே
போற்றி யாம் வந்தோம் புகழ்ந்தேலோர்
எம்பாவாய். (21)

---

## அங்கண்மாஞாலத்து

கண்ணனுடைய பள்ளியறை வாசலில் அவனைப் போற்றி நிற்கும் பெண்கள் ஒன்று சொல்கிருர்கள்: 'இந்த உலகம் அழகுடையது; மிகப் பெரியது. இதன்மேலுள்ள ஆசையை சாதாரண மனிதராலேயே எளிதில் விடமுடியாது. பிறகு, எல்லாப் போகங்களும் கிட்டி உள்ள அரசர்க்கு முடியுமா? அவர்கள்கூட, உலக இன்பங்களைத் துறந்து, உன்னைப் பெறுவதற்காக அவற்றை முழுவதும் கைவிட்டு, அபிமானம்

எதுவும் இல்லாதவராய், உன் காலடியில் கூடி இருக்கிறார்கள். நாங்களும் அப்படித்தான். உன்னை விரும்பி வந்திருக்கிறோம் என்பது மாத்திரம் இல்லை. மற்ற எல்லாவற்றையும் ஒதுக்கி, பகைத்துக்கொண்டு கூட வந்துவிட்டோம். ஆகவே, நீயே கதி' என்கிறார்கள். உலகப் பொருளின் மேல் ஆசை, உடலின் மேல் ஆசை, உயிரின் மேல் ஆசை, உயிருக்கு சுதந்திரம் உண்டு என்ற அஞ்ஞானம், இவை அனைத்தும் களைந்த உயிரே, இறைவனுடைய நிலையை உணர முடியும். அத்தகைய ஜீவாத்மாவே, பகவானுடைய அருள் நோக்குக்கு உரியது. 'அந்த நோக்கு எங்களுக்குக் கிட்டாதா' என்று ஏங்குகிறார்கள் ஆயர் பெண்கள். 'கருணை நிரம்பிய உன் விழி, கிங்கிணியைப்போல் பாதி திறந்து, செந்தாமரைபோல் எழிலுடன், சிறிது சிறிதாக எங்களை நோக்கி மலரப்படாதா? சூரியனும் சந்திரனும் போல—பகைவர்க்கு வெப்பமாயும், அடியவர்க்குத் தண்ணென்று குளிர்ந்தும் இருக்கும்—உன் கண்களால் எங்களை மாத்திரம் ஒரு தடவை நீ நோக்கிவிட்டால் போதும் அப்பா; தீராத எங்கள் வினையெல்லாம் தீர்ந்துவிடும்' என்று கண்ணனுடைய கண்ணழகிலே, அதன் ஆற்றலிலே, தங்களை மறக்கிறார்கள்.

அங்கண்மா ஞாலத்து அரசர் அபிமான
பங்கமாய் வந்துநின் பள்ளிக் கட்டில்கீழே
சங்கமிருப் பார்போல் வந்துதலைப் பெய்தோம்
கிங்கிணி வாய்ச்செய்த தாமரைப் பூப்போலே
செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழியாவோ?
திங்களும் ஆதித்தியனும் எழுந்தாற்போல்
அங்கணிரண்டும் கொண்டு எங்கள்மேல் நோக்குதியேல்
எங்கள்மேல் சாபம் இழிந்தேலோர் எம்பாவாய். (22)

## மாரி மலை முழைஞ்சில்

கோபியருடைய உருக்கமான முறையீடு கண்ணன் காதில் விழுகிறது. 'அடடா, களங்கமற்ற இவர்களை அதிகமாகச் சோதித்து விட்டோமோ' என்ற கருணையோடு பள்ளியறையை விட்டு வெளியிலே வருகிறான். அந்தக் காட்சியில், அவன் வரும் கம்பீரத்தில், வசமிழந்து நிற்கிறார்கள் கோபியர். மழைக்காலத்தில், தன்னுடைய குகையில் உறங்கிக் கிடக்கிறது சிங்கம் ஒன்று. விழித்துக்கொள்கிறது. அதன் விழிகள் அனல் கக்குகின்றன. அதன் பிடரி-மயிர் சிலிர்த்துப் பொங்குகிறது. உடலை உதறி நாற்புறமும் பதிபோடுகிறது. நிமிர்ந்து முழங்குகிறது. குகையிலிருந்து புறப்படுகிறது. இந்தக் காட்சி நினைவுக்கு வருகிறது கண்ணன் வருவதைக் கண்டு நிற்கும் பெண்களுக்கு. அவன் இவர்களிடம் ஓடோடியும் வந்து 'நான் என்ன செய்யவேண்டும் உங்களுக்கு?' என்று கேட்கிறான். பெண்களின் வேதனையெல்லாம் கணத்தில் மறைந்து விடுகின்றன. அவர்கள் புன்முறுவலோடு, 'கண்ணனைக் கண்டோம், வேறென்ன வேண்டும்' என்ற நிறைவோடு, 'இப்படியா நாங்கள் வந்த காரியத்தை ஆராய்வது? எங்கள் அரசன் இல்லையா நீ? சிங்கம் போல நடந்து சென்று, மண்டபத்தை அடைந்து, அங்குள்ள இரத்தின சிம்மாதனத்தில் அமர்ந்து எங்கள் குறை என்ன என்று கேள். அதுதான் முறை. காயாம்பூ வண்ணா' என்கிறார்கள். 'அவன் வெளியே வருவதைப் பார்க்கவேண்டும்; நடந்து செல்வதைப் பார்க்கவேண்டும்; சிம்மாதனத்தில் நீல வண்ணனாகிய அவன் வீற்றிருப்பதைப் பார்க்கவேண்டும். பார்க்கவேண்டும், பார்க்கவேண்டும். அவனைப் பார்த்துக்கொண்டே இருக்கவேண்டும், வேறென்ன வேண்டும்?' என்று அவனைக் கண்ட இன்பத்தில் திளைக்கிறார்கள் கோபியர். பிரிந்த சத்தியப் பொருளை மறுபடியும் அடைந்து விட்டால், அந்த இன்பத்திற்கு ஈடு ஏது? எல்லை ஏது?

மாரி மலை முழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து
வேரிமயிர் பொங்க எப்பாடும் பேர்ந்துதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்
போதருமா போலேநீ பூவைப் பூவண்ணா! உன்
கோயில் நின்றிங்ஙனே போந்தருளிக் கோப்புடைய
சீரிய சிங்காசனத் திருந்து யாம்வந்த
காரியம் ஆராய்ந்து அருளேலோர் எம்பாவாய். (23)

---

## அன்றிவ் வுலகம்

பள்ளியறை வாசலில் இருந்து, சிம்மாதனம் வரையில் நடந்து செல்லும் கண்ணனுடைய நடையழகுக்குப் பல்லாண்டு பாடுகிறார்கள் கோபியர். 'இப்போது எங்கள் முன் நடந்து செல்லும் இந்தத் திருவடி, அன்று நீ வாமனனாக வந்து திரிவிக்கிரமனாக மாறியபோது, உலகத்தை அளந்தது; அளந்து, உலக ஆசையிலிருந்து மகாபலியை மீட்டது; இன்று எங்களையும் இவ்வுலகப் பந்தத்திலிருந்து மீட்டது. அதைப் போற்றுகிறோம். கல்லிலும் முள்ளிலும் வருந்தி, காடும் மலையும் கடந்து, இலங்கைக்குச் சென்றது இந்தத் திருவடி, நீ ராமனாக வந்தபோது. அன்று இலங்கையை உன் திறலால் அழித்து, உன்னைப் பிரிந்து அரக்கரிடையே வருந்திய பிராட்டியை மீட்டாய். இன்று உன் பிரிவு தாங்காமல் தவித்த எங்களையும், எங்கள் குறைகளையெல்லாம் அழித்து மீட்டாய். இராவணனாவது அவன் விரோதி என்று தெளிவாக முடிவு கட்டும்படிக்கு உன்னை எதிர்த்தான். மாயச் சகடமாக உருமாறி வந்தான் சகடாசுரன். அவன் உரு மாய்ந்து அழியும்படி அவனை உதைத்தது உன் திருவடி.

கன்றின் வடிவாக வந்தான் வத்ஸாஸுரன். விளங்கனி வடிவாய் வந்தான் கபித்தாஸுரன். உன் திருவடியால் கன்றை விளங்கனிமேல் எறிந்து, இரு தீமைகளையும் ஒருங்கே அழித்தாய். பொய்யையும் வஞ்சனையையும் இவ்வாறு ஒழித்த உன் வீரத் திருவடியைப் போற்றுகிறோம். அதுவே இன்று எங்கள் தீமைகளைக் களைந்து எங்களை வாழ்விக்கிறது. எங்களுக்கும் வாழ்வுண்டா என்று வருந்தினோம். அன்று கோவர்த்தன கிரியைக் குடையாய்ப் பிடித்து, பசுக்களையும் இடையர்களையும் காத்த பெருங்கருணை இன்று எங்கள் துயரையெல்லாம் துடைத்தது. அந்தக் கருணையோடு கலந்து நின்று அதன் நோக்கத்தை நிறைவேற்றும் உன் பேராற்றல், பகைவரை வென்று அவர்களை அழிக்கும் உன் வலிமை, இன்று உன் கையில் உள்ள வேலாக வடிவெடுத்து, 'அஞ்ச வேண்டாம்' என்று எங்களுக்கு ஆறுதல் கூறுகிறது. இதை வாழ்த்துகிறோம். ஐயனே, எங்களுக்கு என்னவேண்டும் என்று கேட்கிறாய்? உன் வீரத்தை இப்படிப் போற்றி, உன்னை அனுபவிக்கவே இன்று உன் அருளால் வந்தோம். அனுபவித்துக் கொண்டிருக்கிறோம். இப்படியே என்றுமிருக்க எங்களுக்கு இரங்கு' என்று பேசுகிறார்கள் கண்ணனுடைய நடையழகிலே நெஞ்சைப் பறிகொடுத்து நிற்கும் ஆயர்பாடிச் சிறுமியர்.

அன்றிவ் வுலகம் அளந்தாய்அடி போற்றி!
சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல்போற்றி!
பொன்றச் சகடம் உதைத்தாய் புகழ்போற்றி!
கன்று குணிலா எறிந்தாய் கழல்போற்றி!
குன்று குடையா எடுத்தாய் குணம்போற்றி!
வென்று பகைகெடுக்கும் நின்கையில் வேல்போற்றி!
என்றென்றுன் சேவகமே ஏத்திப் பறைகொள்வான்
இன்று யாம்வந்தோம் இரங்கேலோர் எம்பாவாய். (24)

---

## ஒருத்தி மகனாய்ப் பிறந்து

"ஏதோ நோன்பு என்று முறைக்காகச் சொல்லிக் கொண்டு வந்தோம். ஆனால், எங்கள் நோன்பெல்லாம் உன்னைப் பாடுவதே. அதன் நோக்கமோ உன்னைப் பெறுவதே" என்று கண்ணனிடம் பேசும் ஆய்ப்பாடிப் பெண்கள், "நோன்புக்கு இடையூறு வராமல் காப்பதும் உன் பொறுப்புத் தான். அதை உன்னால் சாதிக்க முடியும் என்பது எங்களுக்குத் தெரியாதா?" என்கிறார்கள். "எப்படித் தெரியும் என்கிறாயோ? உன்னைப் பெற்றதால் ஒப்பற்ற பாக்கியவதியான தேவகியின் வயிற்றிலே பிறந்தாய். அதே இரவில் உன்னை வளர்த்து உன் அழகை முழுவதும் அனுபவிக்கும் ஒப்பற்ற பெருமையை, யசோதைக்குத் தந்து, அவள் மகனாக ஒளித்து வளர்ந்தாய். நீ இருப்பதைப் பொறுக்க மாட்டாதவனாய் உனக்குத் தீங்கு நினைத்த கம்ஸன் வயிற்றில் பயம் என்ற நெருப்பைச் சொரிந்தாய். உன்னால் சாதிக்க முடியாதது எது? எங்களால் முடிந்தது ஒன்றுதான். உன் செல்வத்தையும் வீரத்தையும் பாடி, உன்னைப் பிரிந்து, பிறந்து பிறந்து வாடும் எங்கள் பெருந்துயரத்தைத் தீர்த்துக் கொள்வது தான். அதுவும் உன் அருளில்லாமல் முடியாது. அந்த அருளே நாங்கள் விரும்பும் நோன்புப் பரிசு. இதை அளிப்பாயா?

ஆனால், அலகிலாத உன் மாயத்தை எண்ணும்போது அச்சமாகவும் இருக்கிறது. தேவகிக்கு உன்னைத் தந்தும் தாராமல், பிறந்த உடனேயே ஓடிவந்து விட்டாயே! யசோதையின் வயிற்றில் பால் வார்த்த நீ, கம்ஸன் வயிற்றிலே நெருப்பை யல்லவா கொட்டினாய்? உன் மாயத்தை எண்ணும் போது பயமாய் இருக்கிறதடா. உன் அருள் எங்களுக்கும் வருமா? தேவகிக்கு வந்ததுபோல், தோன்றி உடனே ஒளிக்காமல், நிலையாக எங்களுடன் இருந்து, நிரந்தரமாக எங்களை வாழ்விக்குமா? என்று கேட்டு, கண்ணனைப் பார்த்துப் பார்த்துக் களிக்கிறார்கள்.

ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓர்இரவில்
ஒருத்தி மகனாய் ஒளித்து வளரத்
தரிக்கிலான் ஆகித்தான் தீங்கு நினைந்த
கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்
நெருப்பென்ன நின்ற நெடுமாலே! உன்னை
அருத்தித்து வந்தோம் பறைதருதி ஆகில்
திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி
வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்தேலோர் எம்பாவாய். (25)

---

## மாலே மணிவண்ணா

கோபியருடைய எல்லையற்ற பக்தியைக் கண்டு, பரவச மடைகிறான் பகவான். அதைக் கையேந்திப் பெறுவதற்குத் தானே, பரமபத நாதனான அவன் இந்த மண்ணுலகத்திற்கு மனித வடிவம் தாங்கி வந்தான். "இந்த அன்புக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன்?" என்று அவனுங்கூட மயங்குகிறான். "எங்களுடைய அன்பே நாங்கள் விரும்பும் பயன், நீ எங்களுக்குச் செய்யும் கைம்மாறு" என்று சொல்லிவிடுகிறார்கள் கோபியர். "இருக்கட்டும், இருந்தாலும் நோன்பு என்று மேற்கொண்டீர்கள் அல்லவா? அதற் குண்டான பொருள்களையாவது தருகிறேன்" என்று சொல்கிறான் கண்ணன்.

"பொருளா, இரு இரு. உன்னைக் காண்பதற்கு முன் உன்னிடம் ஏதோ அளவற்ற மோகம் கொண்டதாக எண்ணி இருந்தோம். இப்போது உன்னைக் கண்டோம்; நீ எங்களிடம் கொண்டுள்ள காதலுக்கு முன், எங்கள் அன்பு ஒன்றுமே இல்லை என்பது தெரிகிறது. அடியவரிடத்தில் கொண்ட தீராப் பெருங் காதல் வடிவாய், மாலாய், எங்கள் முன் நிற்கிறாய். என்ன பொருள் எங்களுக்கு வேண்டுமென்று கேட்கிறாய்? நீ கேட்பதால் சொல்லுகிறோம். ஆனால், இப்

பொருள்களில் மயங்கி உன்னை மறந்துவிட மாட்டோம். பூமியெல்லாம் அதிரும்படி முழங்கும் பால் போன்ற சங்குகள் வேண்டும், ஆனால் உன்னுடைய பாஞ்ச சன்யத்தைப்போல். அவற்றின் முழக்கத்தில் எங்கள் அகங்காரம் அகலும்; உலக ஆசைகள் விலகும்; ஞானம் உதயமாகும்.

பெரிய பறைகள், உன்னுடைய அலகிலாப் புகழையும் தாளத்தில் கட்டும் மிகப் பெரிய தாளவாத்தியங்கள் வேண்டும். அவை எங்கள் சுதந்தரத்தையும் கட்டுப்படுத்தி, நீயே சுதந்தரன் என்பதை முழக்கி எங்களை விடுவிக்கும். உன்னைப் பாடிப் பரவும் அடியவர் கூட்டம் வேண்டும், நாங்கள் அவர்களோடு ஒன்றிக் கரைந்துபோக அழகிய விளக்கு வேண்டும், உன் அடியவர் நிலையை எங்களுக்கு உணர்த்தும் ஞான விளக்கு; கொடி வேண்டும், உன் கைங்கர்யமாகிய கொடி; விதானம் வேண்டும், உன் பணியைத் தவிர வேறொன்றும் செய்யாமல் எங்களுக்கு உன் அருள் நிழல் தந்து காக்கும் மேலாப்பு வேண்டும்; இவையெல்லாம் வேண்டும். ஆனால், உன் அருளைத் தாங்கி, அதன் வடிவமாக நின்று எங்களை உய்விக்கும் வகையில் வேண்டும்; அதாவது நீயே வேண்டும்'' என்கிறார்கள் கோபியர்.

மாலே! மணிவண்ணா! மார்கழி நீர்ஆடுவான்
    மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்
ஞாலத்தை எல்லாம் நடுங்க முரல்வன
    பால்அன்ன வண்ணத்துன் பாஞ்ச சன்னியமே
போல்வன சங்கங்கள் போய்ப்பாடு உடையனவே
    சாலப் பெரும்பறையே பல்லாண் டிசைப்பாரே
கோல விளக்கே கொடியே விதானமே
    ஆலின் இலையாய்! அருளேலோர் எம்பாவாய். (26)

## கூடாரை வெல்லும் சீர்க்கோவிந்தா

கண்ணனைக் கண்ணாரக் கண்ட கோபியர் மறுபடியும் பேசுகிறார்கள். "நீ உன்னை வணங்காமல் இருப்பாரையும் கருணையால் வெல்லும் குணமுடையவன். காப்பதே, தொழிலாகப் பசுக்களைக் காப்பாற்றி நிற்கும் கோவிந்தனல்லவா நீ. கூடாதாரை வென்று உன் அடியராக்குகிறாய். கூடியவருக்கு, உன் அடியவர்களுக்கு, நீ தோற்றுப் போகிறாய். எங்களைப் பார்த்து உலகப் பொருள் ஏதாவது வேண்டுமா என்று நீ கேட்பது உனக்கு வெற்றியா? ஆனால் ஒன்று. இவ்வுலகத்திலும் எல்லோரும் அதைக் கண்டு உன்னைப் புகழும்படி, பொருட் செல்வமும் பெற்று அடியவர்கள் வாழவேண்டும் என்பது உனது திருவுள்ளமா? அப்படியானால் கொடு, ஐயனே, எல்லாவற்றையும் கொடு. கைக்குச் சூடகம், தோளுக்கு வளை, காதுக்குத் தோடும் செவிப்பூவும், காலுக்குப் பாடகம்-எல்லா நகைகளையும் கொடு. உன் அருளின் எடுத்துக்காட்டாக அவற்றை அணிந்து செல்வோம். எங்கள் நோன்புதான் நிறைவேறிவிட்டதே, உன்னைத்தான் கண்டு விட்டோமே இனி, இதுவரை விலக்கி வைத்திருந்தவற்றை, நீ தந்த பரிசுகளாக ஏற்றுக்கொள்ளலாம். ஏற்றுக்கொள்வதே எங்கள் பாக்யம். புதிய ஆடை தா, அணிகிறோம். பாற்சோற்றை நெய்யினால் மூடி, முழங்கை வழியாக நெய் வழியும் படி அதை அடியவர் எல்லோரோடும் ஒன்றாகக் கூடி இருந்து உண்டு மகிழ்வோம். உலக வாழ்க்கைதானே என்ற வெறுப்பு எதற்கு? அதிலும் உன் அருட் கரத்தைக் கண்டுய்யும் உள்ளத்திற்கு வேதனை ஏது? இங்கேயும் இந்த மண்ணிலேயும், அதைப் பரமபதத்தைவிட உயர்ந்ததாகச் செய்த உன் அருளாலே, உள்ளம் குளிர்ந்து வாழ்வோம். பிறவி என்பது எங்களுக்கு இனித் துயரமன்று, உன் பணி. பிரிவென்பது வேதனையன்று; உன்பேரில் பக்தி செலுத்தும் வாய்ப்பை அளிக்கும் பேரின்பம். உலகமென்பது உன்னை

மறைக்கும் காடன்று; உயிர்களை இனிது மறித்து, நீரூட்டி, என்றென்றும் எங்களோடு நீ இருக்கும் பிருந்தாவனம்" என்கிறார்கள் கோபியர்.

கூடாரை வெல்லும்சீர்க் கோவிந்தா! உன்தன்னைப்
பாடிப் பறைகொண்டு யாம்பெறும் சன்மானம்
நாடு புகழும் பரிசினால் நன்றாகச்
சூடகமே தோள்வளையே தோடே செவிப் பூவே
பாடகமே யென்றனைய பல்கலனும் யாம்அணிவோம்
ஆடை உடுப்போம் அதன்பின்னே பால்சோறு
மூடநெய் பெய்து முழங்கை வழிவாரக்
கூடி இருந்து குளிர்ந்தேலோர் எம்பாவாய். (27)

---

## கறவைகள் பின்சென்று

"உலகத்தை ஒதுக்குவானேன்? பார்க்குமிடம் எங்கும் நீக்கமற நீயே நிறைகிறாய் என்ற உணர்வு மாத்திரம் இருந்தால், உலகத்தை ஒதுக்குவானேன்? நீ மட்டும் எங்களோடு இருந்தால் போதும் அப்பா. இவ்வுலகே பரமபதம்" என்று பேசும் கோபியர் இந்த உணர்வு தங்களுக்கும் கிடைத்ததை எண்ணி, இறைவன் அருளை வியந்து பரவுகிறார்கள். "நாங்கள் ஆடுமாடுகளோடு மிருகப் பிராயமாக இருந்தவர்கள். காட்டிலே அலைந்து திரிந்து, சோறே பெரிதென்று உண்பதையே வாழ்க்கைப் பயனாக எண்ணி வளைய வந்தவர்கள். சற்றேனும் அறிவில்லாதவர்கள். எங்கள் குலத்திலே வந்து பிறந்தாய். எங்களோடு உறவு கொண்டாய். எங்களைப்போல் பசுக்களை மேய்த்தாய். ஆனால், நீயோ குறைவொன்றுமில்லாத பூரணன். அதை முதலில் உணராமல், எங்கள் அன்பினால், உன்னைப் பலபடியாக, அலகிலா உன் பெருமைக்கொவ்வாத பெயரிட்டு அழைத்தோம். அதை மன்னித்துவிடு. எங்கள் அன்பை வளர்த்தாய்;

அதன் மூலமாக எங்கள் அறிவை வளர்த்தாய்; உன்னையும் காணும் அளவுக்கு வளர்த்தாய். நீ எங்கள் இறைவன் என்பதைத் தெரிந்துகொண்டோம். அதுவும் நீ எங்களோடு பாராட்டிய உறவினால் தெரிந்துகொண்டோம்.

இந்த உறவு உன்னாற்கூட இனி விலக்க முடியாத ஒன்று. அது ஒன்றையே வேண்டுகிறோம்; நோன்புப் பரிசாக எண்ணுகிறோம்; செல்வமாகக் கருதுகிறோம். இனி எங்கிருந்தாலும் உன்னோடுதான் இருக்கிறோம். ஐயனே, இனி எந்த வாழ்க்கையும் பேரின்பப் பெருவாழ்வுதான்" என்று இறைவன் கருணையை வியந்து, உள்ளம் கனிந்து பேசுகிறார்கள், அவனையே பெற்ற ஆயர்பாடிச் செல்வியர்.

கறவைகள் பின்சென்று கானம்சேர்ந் துண்போம்
அறிவொன்றும் இல்லாத ஆய்க்குலத்து உன்தன்னைப்
பிறவி பெறுந்தனைப் புண்ணியம் யாம்உடையோம்
குறைவொன்றும் இல்லாத கோவிந்தா! உன்தன்னோடு
உறவேல் நமக்கிங் கொழிக்க ஒழியாது
அறியாத பிள்ளைகளோம் அன்பினால் உன்தன்னை
சிறுபேர் அழைத்தனவும் சீறி அருளாதே
இறைவா! நீ தாராய் பறையேலோர் எம்பாவாய். (28)

---

## சிற்றஞ்சிறு காலே

"சோற்றிலே களித்துத் திரிந்த எங்கள் குலத்திலே பிறந்து, எங்களுக்கு எளியனாகி எங்களை ஆட்கொண்டாய். இனி, எங்களை உனக்குக் குற்றேவல் புரியும் தொண்டர்களாகவே வைத்திரு. இந்தப் பாக்யத்தை எங்களுக்கு அளிக்காமல் நீ இருந்துவிடக்கூடாது. காலம் உள்ளவரைக்கும், எத்தனை எத்தனை பிறவி வந்தாலும், அவற்றில் எல்லாம் இன்றிருப்பதைப்போல உன்னோடு உறவு கொண்டவர்களாக, உன்னைத் தவிர வேறொன்றையும் எண்ணாத உள்ளச்

செல்வம் படைத்தவர்களாக, உனக்கே ஆட்பட்டு உன் பணியே செய்யும் உன் அடிமைகளாக இருக்கவேண்டும், பெருமானே. வேறொன்றும் எங்களை அணுகாமல் காப்பாற்று வதும் உன் பாரம்" என்று பாடுகிறார்கள், இறைவனையும் ஆட்கொள்ளும் அன்பின் பெருமைக்கு எடுத்துக்காட்டாக நிற்கும் ஆயர்பாடிக் கன்னியர்.

சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்துஉன்
பொற்றாமரை அடியே போற்றும் பொருள்கேளாய்
பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்துநீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது
இற்றைப் பறைகொள்வான் அன்றுகாண் கோவிந்தா!
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே ஆவோம் உமக்கேநாம் ஆட்செய்வோம்
மற்றைநம் காமங்கள் மாற்றேலோர் எம்பாவாய். (29)

---

## வங்கக் கடல் கடைந்த

ஆயர்பாடிச் சிறுமியரோடு தன்னுடைய பாவனையினால் பக்தி நோன்பு நோற்ற ஆண்டாள், ஸ்ரீ வில்லிப்புத்தூரி லிருந்து அந்த அற்புத அனுபவத்தை நினைத்துப் பார்க்கிறாள். பாற்கடலைக் கடைந்து தேவர்களுக்கு அமுதம் தந்த பரமன், திருவுக்குந் திருவாக நிற்கும் மாதவன், இப்படி கடந்த தன்மையனான அவன், கண்ணனாக இங்கே வந்து அசுரன் கேசியை அழித்துக் கேசவனாக நின்றான், 'உலகத்துத் தீமையை அழிக்க நானே வந்திருக்கிறேன்' என்று காட்டு வானைப்போல. மலர்ந்த முகத்தோடும், பக்தி என்ற ஆபர ணத்தோடும் அவனைத் தேடிச் சென்ற ஆயர்பாடிச் சிறுமியர், அவனைக் காண்பதற்கும் அருளினான். அவனையே பரிசாக அவர்களுக்குத் தந்தான். என்ன கருணை! என்ன எளிமை! என்ன வண்மை!

"இவற்றை அனுபவித்தேன். அவனுடைய அருளால் கிட்டிய இந்தப் பாக்யம், தமிழ்ச்சொல் மாலையாக வடிவெடுத்தது. இதை ஏற்பவர்கள் அடியவரிடத்தில் மால் கொண்டு விளங்கும் அக்கருணை வள்ளலின் அருளைப் பெறுவார்கள்; இன்பத்திலேயே என்றென்றும் நிலைத்து இருப்பார்கள்" என்று பாடுகிருள் ஆண்டாள். தனக்குக் கிடைத்த பாக்யம், இறைவன் அருளால் எல்லா உயிர்களுக்கும் கிட்ட வேண்டும் என்று, பரம தயையோடு இந்த மங்கள வாழ்த்து அருள்கிருள்.

வங்கக்கடல் கடைந்த மாதவனைக் கேசவனை
திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி
அங்கப் பறைகொண்ட ஆற்றைஅணி புதுவைப்
பைங்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான்
கோதைசொன்ன
சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே
இங்கிப் பரிசுரைப்பார் ஈர்இரண்டு மால்வரைத்தோள்
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்
எங்கும் திருவருள்பெற்று இன்புறுவர் எம்பாவாய். (30)

ஸ்ரீ ஆண்டாள் திருவடிகளே சரணம்.

மங்களம்.

---

ஸ்ரீ ஆண்டாள் அருளிய

# திருப்பாவை





விளக்க உரை:

பேராசிரியர்

அ. சிநிவாசராகவன்

